பண்டிகை நாளாச்சேன்னு பஞ்சகச்சம்
டிக்கலாம்னு ஆசைப் பட்டா.. இப்படி
மடிசார் கட்டி உட்டிருக்கியே!

# கல்கி

KALKI 5-12-82

ரு 1.20





# இசை விழாவுக்கு வரவேற்பு விழா

அண்மையில் 'மியூசிக் கிளப்' ஆதரவில் நடைபெற்ற பாலக்காடு கே. வி. நாராயணசுவாமியின் கச்சேரி, இசை விழாவுக்கு ஒரு வரவேற்பு விழாவாகவே திகழ்ந்தது.

கே. வி. என். கச்சேரிகளில் எப்போதுமே எதிர்பாராத மகிழ்ச்சிகளுக்குக்குறைவிராது. அன்றும் சர்ப்ரைஸ்கள் ஏராளம். மேடையில் பக்க வாத்தியமாக எம். எஸ். ஜி.யும் திருச்சி சங்கரனும் அமர்ந்திருந்தது சர்ப்ரைஸ். ஹிந்தோள ராகத்தை யொட்டி யாரும் எதிர்பாராத வகையில் 'மா ரமணன்' என்ற பழங்கால சிவன் பாடலை கே. வி. என். பாட ஆரம்பித்தது வியப்பு. சங்கராபரண ஆலாபனைக்குப் பிறகு அபூர்வ கிர்த்தனை ஏதாவது பாடுவார் என்று நினைத்தபோது, வழக்கமான 'அக்ஷய லிங்க விபோ' என்று தொடங்கியது ஆச்சரியம். தமிழ்ப் பாடல்களை ஏராளமாக நிகழ்ச்சி நிரலில் சேர்த்துக்கொண்டது எதிர்பாராத மகிழ்ச்சி. இடையில் ஒரு முறை தமது வழக்கமான பாணியிலிருந்து மாறி எம். எஸ். ஜி. வாசிப்பு பாணியில் பாடிக் காட்டியது புன்னகை அரும்பச் செய்த குட்டி சர்ப்ரைஸ்.

இவையெல்லாம் மேலோட்டமான வியப்புக்கள். இவை போதாததற்கு கே.வி. என். பாடும்போது ஒவ்வொரு நிமிஷமும் புதிய புதிய ஆச்சரியங்கள் காத்திருக்கும். அடுத்தக் கட்ட ராக ஆலாபனை அல்லது நிரவல் அல்லது சுவரப் பிரஸ்தாரம் இப்படி அமையும் என்று நாம் எண்ணுகையில் நமது எதிர்பார்ப்பைத் தூக்கி அடிக்கும் வகையில் புதிய கற்பனை வளங்களைக் காட்டித் திக்குமுக்காடச் செய்து விடுகிறார். இதை விடவும் மேலாக பாவ பூர்வமாகவும், உருகி உருகிப் பாடி நம்மை மெய் சிலிர்க்கவும் வைக்கிறார். 'யார் இருக்கிறார்கள் இப்படிப் பாட? ஒரு கரத்தில் விரல் விட்டு எண்ணக் கூடிய அளவில் கூட இல்லையே?' என்று தோன்றும்.

ஒரு விநாடிகூட கச்சேரியில் தொய்வு இல்லாமல் கவனித்துக்கொண்டார் திருச்சி சங்கரன். கண்டாவிலிருந்து விடுமுறையில் வந்தவரை வளைத்துப் போட்ட காரியதரிசி படராஜனுக்கு தாங்க்ஸ். சங்கராபரணப் பாடல் முடிந்ததும் சங்கரனின் லயஆபரண ஜோடனை ஆரம்பம். ஒரு சமயம் தூரத்து இடிமுழக்கம் போலவும், ஒரு தருணம் அருகே ஓடும் ஆற்றின் சலசலப்பு போலவும் எத்தனை விதமான நாத பேதங்கள்! லய வித்தியாசங்கள்!

எம். எஸ். ஜி.யோ பாடகரின் ஒரு நெளிவு சுளிவைக்கூட விடாமல் பிடிவாதமாக அடியொற்றிச் சென்றார். அவருடைய ஸ்ரீரஞ்சனி, ராக அழகை அப்படியே வடிவமைத்துக் காட்டியதென்றால் கே. வி.என். பாடிய 'காண வேண்டாமோ' பக்தி பாவத்தின் அழகை நாத ஸ்வரூபமாக்கியது.

கன ராகங்களில் அமைந்த ராகமாலிகை. 'வாராதிருந்தால் இனி நான் வடிவேல் விழிக்குமையெழுதேன்' என்று நாயகியின் ஏக்க உணர்ச்சிகளை கே. வி. என். பாடக் கேட்டபோது 'வாராதிருப்பவன் வாழ்க! வந்துவிட்டால் இப்படிப்பட்டப் பாட்டு கிடைக்குமா?' என்று சுயநலத்துடன் ஒரு சமயமும் 'அடடா! நமக்குச் சக்தி இருந்தால் இப்படி வாராதிருப்பவன் கையைப் பற்றிக் கரகரவென்று இழுத்து வந்துவிடலாமே' என்று கோபத்துடன் ஒரு சமயமும் எண்ணத் தோன்றியது.

கே. வி. என்னுக்கு எத்தனை விருதுகளை, பட்டங்களை யார் யார் தந்திருக்கிறார்களோ இல்லையோ, அவை வருகிறபோது வரட்டுமே. அனைத்தையும் ஒருசேரப் பெறுவதற்குரிய தகுதி எப்போதோ வந்தாகிவிட்டது. போதாதா?

-குட்டி கிருஷ்ணன்

## இந்த பெண்மணிகளே இப்படித்தான்

கான்பூரில் மனைவிகளின் கொடுமையினின்று கணவன்மார்களைக் காப்பாற்றக் 'கணவன்மார்கள் சங்கம்' உருவெடுத்துள்ளது. உறுப்பினர் எண்ணிக்கை நூறைத் தாண்டி விட்டது.

தகவல்: சௌம்யா

நன்றி: இல்லஸ்டிரேடட் வீக்லி

# இந்தியாவில் ஆசியா!

யாட்டிலிருந்து ஒதுக்கி விட்டார்களே!' என்று குறைப்பட்டுக் கொண்டார்!

● யுனைடெட் அராபியக் குழு பதக்கங்களைக் குவிக்கிறதோ இல்லையோ, அது வந்த அன்றே ஒரு ரிகார்டுடன் இறங்கியது. இந்தக் குழுவில்தான் அதிக அளவு 'கோச்'கள் உள்ளனர்!

● நேஷனல் ஸ்டேடியம். தங்கப் பதக்கத்துக்காகப் போராட வந்திருக்கும் பாகிஸ்தான் குழுவினர் உக்ரமாக 'பிராக்டிஸ்' செய்து கொண்டிருந்தனர். அந்தச் சம



⌘ கேரள கதகளி

● ஆசிய விளையாட்டுக் கிராமத்தில் தமிழக ஆட்டக்காரி யான்மினுக்கும் பெரும் பிரச்னை! அவர் வந்த ரயில் 'சிறிய விபத்து'க்கு உள்ளானதால் காலதாமதமாகப் புதுதில்லி வந்து சேர்ந்தார். அதனால் யான்மின் ஒரு நாள் உணவின்றி, அறையின்றித் தவிக்க நேர்ந்தது. பிறகு சமாளித்து நாலு பேருள்ள அறையில் ''இடம்'' கிடைத்ததும்தான் அவளுக்கு ''நிம்மதி'' பிறந்தது!

● பிரகாஷ் படுகோன் மிகுந்த ஆசையோடு அயல் நாட்டிலிருந்து பறந்து வந்தார் ஆசிய விளையாட்டில் பங்கேற்க. ஏனோ அவரை ஆசிய விளையாட்டுக் கிராமம் ஏற்க மறுத்துவிட்டது. ஆசிய விளையாட்டு நிர்வாகிகள் அவரை ஒரு குடும்பத்தினர் இல்லத்துக்கு அழைத்துச் சென்று பிரச்னையைச் சமாளித்தனர். 'அவர் பிரசென்ட் ப்ளேயர்; அமெச்சூர் போட்டியில் கலந்து கொள்ளக்கூடாது'என்று இந்தோனேஷியா முட்டுக்கட்டை போட்டது! 'நான் வங்கியில் உத்தியோகம் பார்க்கிறவன்! என்னைவிட அமெச்சூர் ஆட்டக்காரர்கள் நிறையச் சம்பாதிக்கிறார்கள்! என்னை ஆசிய விளை



⌘ பளு தூக்கும் போட்டியில் தங்கப்பதக்கம் பெற்ற கெஜு-ன்செக்



⌘ பஞ்சாபியரின் பங்கரா நடனம்



⌘ கோவா கலைக் குழுவினரின் 'முகமூடி' நடனம்

யத்தில் வி.ஐ.பி. ஸ்டாண்டில் ஒரு விநோத மான நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது. 'பரிசளிப்பு விழா' ரிகர்சல் நடைபெற்றுக் கொண்டிருந்தது! நிர்வாகிகள் — 'வெற்றி யாளர் இந்தியா' என்று அறிவிக்க ஒரு டம்மிக் குழு வந்து தங்கப் பதக்கத்தைப் பெற்றுச் சென்றது! அவர்கள் கணக்குப்படி பாகிஸ்தான்—வெள்ளி, மலேசியா—வெண் கலம் என்று மைக்கில் தெரிவித்தனர்! ஒத் திகை பார்க்கும்போது பாரதத்துக்குத் தங்கப் பதக்கம் என்று கூறுவதைத் தவிர்த் திருப்பதுதான் பண்பாடு எனினும் பாகிஸ் தான் குழுவினர் இதனை 'வேடிக்கை நிகழ்ச்சி' யாக எடுத்துக் கொண்டது குறிப் பிடத் தக்கது!

● நேஷனல் ஸ்டேடியம். வி. ஐ. பி. பகுதி யில் தமிழக முதல்வர் எம். ஜி. ஆர், வி. என். ஜானகி, ஜெயலலிதா ஆகியோ ருடன் அமர்ந்து நிகழ்ச்சிகளைப் பார்வை யிட்டார். தமிழக முதல்வரிடம் சென்று கைகுலுக்கியபோது, ''கடைசி நாள் வரை இருந்து பார்ப்பீர்களா? 'பஸ்ஸில் பாஷைப் பிரச்னை, ஹோட்டலில் ஆங்கிலத் தில் கேட்டால் இந்தியில் பதில்— போன்ற பிரச்னைகளை எப்படிச் சமாளிக்கப் போகி றீர்கள்?'' என்று வினவியது ஆறுதலாக இருந்ததோடு இந்தப் பிரச்னையைத் தமிழக மக்கள் சார்பில் சமாளிக்கவேண்டிய கடமை தமக்கு இருப்பதை அவர் உணர்ந்திருப் பதையும் எடுத்துக் காட்டியது.

● ஜவாஹர்லால் நேரு ஸ்டேடியத்திலுள்ள ஸ்கோர் போர்டு உலகத்திலேயே முதன்மையானது என்ற பெயரைப் பெற்று விட்டது. இந்த ஸ்கோர் போர்டில் ஹிந்தி எழுத்துக்களைப் புகுத்துவது மிகச் சிரமம். அந்தச் செயற்கரிய சாதனையைச் செய்து காட்டியிருக்கிறார்கள். ராட்சத ஸ்கோர் போர்டில் இருபத்தோராயிரம் விளக்குகள் கம்ப்யூட்டர் பகுதியிலிருந்து நேரிடையாக வரும் சிக்னல்களையும் விவ ரங்களையும் அறிவிக்கின்றன. இந்த அபூர்வ சாதனையைச் செய்தவர்கள் ஹங்கேரிய இன்ஜினியர்கள்!

● உலக ஒலிம்பிக் கழகத் தலைவர் சமரந்த் இந்திய ஆசிய விளையாட்டுப் போட்டி நிர் வாகி மெஹ்ராவிடம் கைகுலுக்கியபடி சொன்னார்: ''விளையாட்டுப் போட்டிகளில் மட்டும் மூழ்கிவிடாமல் நீங்கள் உங்கள் தேசத்தையும் அதன் மகோன்னதமான கலை களையும் காட்டி மகிழ்வித்தீர்கள். இந்த நாட்டின் பெருமைகளை உணர்ந்தோம்''

● டேபிள் டென்னிஸ் போட்டியில் வயதில் மிகச் சிறிய எட்டு வயதுப் பெண் ஏமன் நாட்டிலிருந்து வந்து கலந்து கொண்டாள்! இவள்தான் ஆசிய விளையாட்டு கிரா மத்திலேயே 'பேபி!' அவள் பெயர் அல்ஷரா. இவள் ஏமன் நாட்டில் நான் காவது 'ராங்க்' வகிக்கிறாள்!

● நேரு ஸ்டேடியத்தில் கேட்ட, எச்சரிக் கையாகவும் அமைந்த, ஜோக்:

''நீங்கள் கால்பந்து விசிறியா?''
''இல்லை!''
''நீங்கள் வாலண்டியரா?''
''கிடையாது!''
''அப்படியானால் நீங்கள் யார்?''
''பிக்பாக்கெட்!''

● அகாலி தளக் கிளர்ச்சி எழுமோ என்று பலத்த காவல். டால்கோட்ரா இன் டோர் ஸ்டேடியத்துக்குள் ஸ்கூட்டரில் வந்தவர்கள் ஹெல்மெட்டைக்கூட எடுத்துச் செல்லக் கூடாது என்று கண்டிப்பு.

● நேரு ஸ்டேடியத்தில் நரேந்திர சர்மா இயற்றிய தொடக்க விழாப் பாடலை ரவி சங்கர் இசையமைத்துக் கொடுக்கப் பல்லா யிரக்கணக்கான மக்கள் அதனை வெகுவாக ரசித்தனர். இந்தப் பாடலுக்கு விளக் கத்தைத் தந்தவர் அமிதாப் பச்சன்.

● இரானும், இராக்கும் ஒன்றுக்கொன்று பகை பாராட்டினாலும் ஆசிய விளையாட் டுப் போட்டியில் இரு தேசங்களுமே பங் கேற்க முன்வந்தது பாராட்டுக்குரியது. அணி வகுப்பில் ஒவ்வொரு குழுவுக்கும் முன்னால் இந்தியப் பெண்மணி அந்நாட்டுப் பெயர் தாங்கிய பலகையை ஏந்திச் சென்றாள். ஆனால் இரான் மட்டும் இந்தியப் பெண் பலகை ஏந்துவதற்கு முட்டுக்கட்டை போட்டு, தனிப்பெருமை தேடிக் கொண் டது!

-குண்டுமணி

(மையப் பக்கங்களில் மேலும் சில படங்கள்)

**ப**ல்கலைக் கழக நூற்றாண்டு விழாக் கட்டிடத்தில் சங்கர்—கணேஷின் இசையமைப்பில் நடிகை ஸ்ரீவித்யாவும் விவேக் சாரதியும் ஒரு ஹிந்திப் பாடலைப் பாடிக் கொண்டிருந்தார்கள். திடீரென்று பாடலைக் கேட்டுக் கொண்டிருந்த கூட்டத்தில் சலசலப்பு. ஒரு பெரியவரை எட்டுப்பேர் அவசரம் அவசரமாகத் தூக்கிக் கொண்டு ஓடினார்கள்.

சாரதியும் பாடலை 'அம்போ' என்று நிறுத்திவிட்டு ஸ்டேஜை விட்டு ஒரே குதியாகக் குதித்து வெளியே ஓடினார்.

விஷயம் என்னவென்றால் தமது பிள்ளை மேடையில் பாடுவதைக் கேட்டு ரசிக்க வந்திருந்தார் தந்தை. திடீரென்று உடல் நிலை பாதிக்கப்படவே அவரை ஏழெட்டுப் பேர்கள் பரபரப்பாகத் தூக்கிச்செல்வதைப் பார்த்தார் சாரதி. ராயப்பேட்டை ஆஸ்பத்திரியில் தந்தையை நல்லநிலைமையில் பார்த்த பிறகே சாந்தமடைந்தார் சாரதி! ஆனால்... தந்தையின் விரலிலிருந்த மோதிரத்தை யாரோ அபேஸ் செய்து விட்டார்கள்!

**வே**று சில அனுபவங்களை நினைவு கூர்கிறார் சாரதி:

''ஒரு முறை கோவையிலிருந்து ரயிலில் சென்னைக்குத் திரும்பிக் கொண்டிருந்தோம். ஈரோட்டில் நாற்பது ஐம்பது கல்லூரி மாணவர்கள் திதிபுதிபுவென்று எங்கள் பெட்டியில் ஏறினார்கள்.

'' 'சார் ரயிலிலேயே நீங்க கச்சேரி செய்யுங்களேன் — ப்ளீஸ்...'' அவ்வளவுதான் ஓடும் ரயிலில் கச்சேரி செய்தோம். சேலத்தில் அவர்கள் விடைபெறும்போது ஒரு கவரைக் கையில் திணித்துவிட்டு கூட்டத்தில் மறைந்துவிட்டனர். 'சிறு காணிக்கை' என்றார்கள். கவரைப் பிரித்தால் கலையாக இருநூறு ரூபாய்! தங்களுக்குள் கலெக்ஷன் செய்து தந்த அவர்கள் கண்ணியத்தை இன்றும் நினைத்து வியக்கிறேன்.

''**வி**ருதுநகரில் மெல்லிசை நிகழ்ச்சி.

ஆறரை மணிக்குக் கச்சேரி.

நிகழ்ச்சியை ஏற்பாடு செய்தவர் ஆறு மணிக்குத் திடீரென்று வந்து ''சார்.. இன்னிக்கு முதன் முதலாகத் தலைவர் காமராஜரைப் பற்றி நீங்க ஒரு பாட்டு அவசியம் பாடணும்'' என்றார்.

கவிஞர் பூங்குயிலன் ஐந்து நிமிஷத்தில் ஒரு பாட்டு எழுத, 'கல்விக்கு வித்திட்ட காமராஜா' என்று பாடலைப் பாடினோம்.

''**சோ**ழா ஓட்டலில் பழைய இந்திப் படப் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தேன்.

கிரிக்கெட் வீரர் பிரிஜேஷ் பட்டேல் ஒரு பாடலை ரசித்துக் கேட்டுவிட்டு ''ஒன்ஸ் மோர்'' என்றார் உரத்த குரலில்.

''இப்போதுதானே பாடினேன் — அதற்குள் ஒன்ஸ்மோரா?'' என்றேன் சோர்வுடன்.

''அதுதான் கிரிக்கெட் ஆட்டத்துக்கும் உங்களுக்கும் தொழிலில் உள்ள வித்தியாசம். நாங்கள் ஒரு முறை பாட் செய்து அவுட்டானால் ஆட்டம் குளோஸ். ஆனால் நீங்களோ நன்றாகப் பாடினால் ஒன்ஸ்மோர் கிடைக்கும்'' என்றார். பாடினேன்.

''**பா**ர்த்தசாரதி சுவாமி சபாவில் நான் ஒரு சமயம் கச்சேரி செய்ததைக் கேட்டு ரசித்த வனஜா என்ற பெண் என்னைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பெற்றோரிடம் தீர்மானமாகச் சொல்லியிருக்கிறாள். அந்தப் பெண் எனக்குத் தூரத்து உறவுகூட. அப்படி இப்படிச் சுற்றி விஷயத்தை என் வீட்டில் நாசுக்காகச் சொல்லிப் பெண் விரும்பியபடியே என்னை அந்த வீட்டு மாப்பிள்ளையாக்கி விட்டார்கள்!''

பேட்டி: **மன்னை சௌரிராஜன்**

# ஓடும் ரயிலில் ஒரு கச்சேரி





சென்னை மக்கள்
ஆந்திரா




அவரை நம்ம டீம்ல சேர்த்துக் கிட்டாப் போதுமே!
எதிர்க்கட்சிகள்
கர்நாடகா




ராஜினாமா வதந்தி
எனக்கென்ன பயம்!.. நான் எங்கே நகருகிறேன்!..
விஜய பாஸ்கர ரெட்டி






1982 டிசம்பர் 5
துந்துபி கார்த்திகை 19
மலர் : 41 இதழ் : 19

# எல். ஐ. ஸி. அளிக்கும் ஏமாற்றங்கள்!

இப்போதெல்லாம் நம்பிக்கைக்குரிய பெரிய தனியார் நிறுவனங்கள் பதினைந்து சதம் வரை டெப்பாஸிட்டுகளுக்கு வட்டி தரத் தயாராக உள்ளன. வட்டி வீடு தேடித் தபாலில் வந்துவிடுகிறது. இதை விட்டு விட்டு எல். ஐ. ஸி.யில் மக்கள் பிரீமியம் கட்டி சேமிப்பு செய்கிறார்கள் எனில், அது வாழ்க்கையின் நிலையாமையை உணர்ந்திருப்பதால்தான். 'ஒருவேளை மரணம் அடைந்தால் குடும்பம் நிராதரவாக விடப்படாது; அவர்களுக்கு இன்ஷ்யூரன்ஸ் தொகை கிடைக்கும்' என்ற மன நிம்மதிக்காகத்தான். வருமான வரியில் ஓரளவு சலுகை பெறலாம் என்பதும் ஒரு காரணம்—அந்த அளவு சம்பாதிப்பவர்களுக்கு.

செத்தால்தான் லாபமே யொழிய, இருபது வருஷம் வாழ்ந்து பொறுமையாக பிரீமியம் கட்டுபவனுக்கு ஒரு அனுகூலமும் இல்லை. கட்டுகிற பணத்துக்கு வட்டி கிடையாது. அதுதான் போகட்டும். ரூபாயின் மதிப்புக் குறைவையாவது எல். ஐ. ஸி. ஈடுசெய்கிறதா என்றால் அதுவும் இல்லை. இருபது வருஷத்துக்குப் பிறகு இன்ஷ்யூர் செய்த தொகையை ஒருவன் திரும்பப் பெறும்போது அதன் மதிப்பு வெகுவாகக் குறைந்துபோய் விட்டிருக்கிறது. பண வீக்கமும் விலைவாசி உயர்வும் அவன் சேமிப்பைப் பாதிக்கு மேல் தின்று தீர்த்து ஏப்பம் விட்டு விடுகின்றன. போனஸ் என்று எல். ஐ. ஸி. தரும் தொகை அற்பசொற்பமே.

எல். ஐ. ஸி.யைப் பொறுத்த மட்டில் இது முதலில்லா வியாபாரம். மக்களின் சேமிப்பை அது வட்டிக்கு விட்டுக் கொழுத்த லாபம் சம்பாதிக்கிறது. ஆயினும் இதிலே முதல் பலி மக்கள் நலனே தான்! தனியார் இன்ஷ்யூரன்ஸ் நிறுவனங்கள் அரசுடைமையாக்கப்பட்டபோது மக்கள் நலனுக்காகவே செய்வதாகப் பேசப்பட்டது. ஆனால் இதற்கு நேர் மாறாகக் கடந்த பல ஆண்டுகளில் எல்.ஐ.ஸி. மக்கள் பணத்தை உறிஞ்சி கொழுக்கும் ஒரு பயங்கர பொருளாதார ராட்சதனாகவே வளர்ந்துள்ளது. சேவை மனப்பான்மை என்பது அடியோடு போய்விட்டது. ஒரு பாலிஸிதாரரின் மரணம் சம்பவித்தால் வாரிசு எல். ஐ. ஸி.யிடம் பணத்தை வாங்குவது பிரம்மப் பிரயத்தனமாயிருக்கிறது.

எல். ஐ. ஸி.யின் நடவடிக்கைகளை ஆராய்ந்த இரா. செழியன் கமிட்டி, கணக்கு வைத்துக் கொள்வதில் அந்நிறுவனத்தில் ஏகப்பட்ட குறைபாடுகள் இருப்பதைச் சுட்டிக் காட்டியுள்ளது. குறிப்பாக, சம்பளத்திலேயே பிடித்து சேமிப்புச் செய்து பிரீமியமாகச் செலுத்தும் திட்டத்தின் கீழ் கிட்டத்தட்ட 36 கோடி ரூபாய் வரும் பாலிஸிதாரர்களான தனிநபர்கள் கணக்கில் அன்றி ஓர் ஒட்டு மொத்தக் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளது தெரிய வருகிறது. இதனால் எத்தனையோ பாலிஸிதாரர்கள் கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாகி வருகிறார்கள்.

கடினமாக உழைத்து சேமிப்பைப் பிரீமியமாகக் கட்டி வரும் பாலிஸிதாரர்களுக்கு அரசு நிறுவனமான எல். ஐ. ஸி. இது போன்ற பல அநீதிகளை இழைத்து வருகிறது. குறைந்த பட்சம் ரூபாயின் மதிப்பு இழப்பையாவது ஈடுகட்ட எல். ஐ. ஸி. முன்வர வேண்டும். பிரும்மாண்டமான அமைப்பைப் பல சிறு பிரிவுகளாக்கி மெய்யான சேவா மனப்பான்மையுடன் கூடிய பொருளாதாரப் போட்டா போட்டியை வளர்த்துவிட, தனியார் நிறுவனங்கள் தோன்றவும் அனுமதிக்க வேண்டும்.

மக்களுக்குச் சேவை புரியவே ஏற்பட்டது எல்.ஐ.ஸி. அவர்கள் பணத்தை அட்டையாக உறிஞ்சுவதற்கு மட்டுமல்ல.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் -
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# விடிவதற்குள் வா!

## சுஜாதா

**19**

"கிரிஜா கிடைச்சுட்டாளா?" என்றான் கனகசபை பதற்றத்துடன்.

"ஆமா. உங்க சொந்தக்காரங்க கிட்டருந்து தகவல் வந்திருக்கு. நாகர்கோவில்ல யார் இருக்காங்க?"

"அவங்கம்மா."

"அங்கருந்துதான் வந்திருக்கணும். கிடைச்சுட்டாளாம். வேதாரண்யத்திலோ எங்கேயோ ஒரு ஆஸ்பத்திரியில இருந்திச்சாம். பேப்பர்ல விளம்பரம் பார்த்து போலீஸ்காரங்க கிட்ட சொல்லியிருக்காங்க. ஆஸ்பத்திரிக்காரங்களே போலீஸ் ரிப்போர்ட்டும் கொடுத்திருக்காங்களாம்."

"இந்தப் பொண்ணு எப்படி அங்க போச்சு?"

"யாருக்குத் தெரியும்? நல்லாக் கிளப்பி விட்டப்பா புரளியை! ஊரே பத்திக்கிச்சு" என்று கனகசபையைப் பார்வையால் சுற்றும் சாட்டினார் உதவிக் கலெக்டர். "சரி சரி, போய்ப் பாரு உடனே."

"நாகர்கோவிலுக்கு நான் எப்படிங்க போவேன்? பஸ்ஸு ஏதும் போவலியே."

"நான் ஜீப்பு ஏற்பாடு பண்ணித் தரேன் கவலைப்படாதே. முதல்ல கிராமத்திலே எல்லாருக்கும் சொல்லு கிடைச்சுட்டாங்கன்னு. அதுக்காகத்தானே கலகத்தைத் துவங்கினீங்க, இப்பப் பாருங்கன்னு. யோவ்... எங்க அந்த ஒலிபெருக்கி ஆசாமி? எங்க அந்தப் பத்திரிகை ஆசாமி? எல்லாரையும் கூப்பிட்டுச் சொல்லணும். தண்டோராப் போட்டுரலாம். முட்டாப்பசங்களா விவரம் தெரியாம இப்படி பூசலைக் கிளப்பி விட்டீங்களேன்னு. இதுயாரு வெள்ளைக்காரன்!"

புழுதி கிளப்பிக் கொண்டு ஜீப் போன்ற ஒரு வண்டி வந்து நின்றது. அதிலிருந்து ஒரு வெள்ளைக்காரன் இறங்கினான். வெறும் பனியன் மட்டும் அணிந்து கொண்டு வெய்யில் கண்ணாடி போட்டுக் கொண்டிருந்தான். சுற்று முற்றும் பார்த்து விட்டு, வாயில் சிகரெட் தொங்க அவர்களை நோக்கி வந்து,

"ஹூஸ் இன் சார்ஜ் ஹியர்" என்றான்.

"வாட் டு யூ வாண்ட்?"

"ஐம் ஃப்ரம் ஐடீவி. என் இன்டிபென்டெண்ட் நெட்வொர்க்! திஸ் இஸ் டாக்டர் ப்ரௌன்" என்று மற்றொரு வெள்ளைக்காரரைக் காட்டினான். "ஸோஷியாலஜிஸ்ட்!" இடையே சடசடவென்று மற்றொருத்தன் இறங்கி ஒரு காமிராவைத் தோளில் அமைத்துக்கொண்டு அதைச் சரிபார்த்து அதில் ஸ்விட்சைப் பொருத்த காமிராவுக்குள் தென்பட்ட சின்ன டி.வி. திரையில் கனகசபை, உதவிக் கலெக்டர் எல்லோரும் தெரிந்தனர்.

"வெயிட் எ மினிட். யூ கான்ட் ஷூட் எனி ஃபிலிம் ஹியர்!"

"ஐம் நாட் ஷூட்டிங் எனி ஃபிலிம்! ஐம் டேப்பிங் எ வீடியோ."

"யூ காட் பர்மிஷன்? ஷோ மி யூர் பர்மிஷன்."

இதற்குள் அந்தக் காமிராக்காரன் தன் சாதனத்தால் மெல்ல அந்தக் கிராமத்தின் தெருவைப் படம் எடுத்துக் கொண்டிருந்தான். அவர்கள் பேசிக் கொண்டிருக்க வெள்ளைக்காரன் ஒரு காகிதத்தை எடுத்துக் காட்ட, "திஸ் இஸ் நாட் எ பர்மிட்!"

"கமான்! டோன்ட் பி ப்யூராக்ரட்டிக். ஜிம்! டேக் ஷாட் ஆஃப் தி டெஸர்ட்டட் ஸ்ட்ரீட்!"

"வேர் இஸ் தி ரையட்?" என்றான் ஜிம் எதையோ மென்று கொண்டே. "வேர் ஆர் தி டாப்லெஸ் கர்ள்ஸ்?"

"யூ காண்ட் டு திஸ்! தேர் ஈஸ் நோ பர்மிஷன்! யோவ் அந்தக் காமிராக்காரனைத் துரத்துய்யா!"



போலீஸ்காரர்கள் அந்தக் காமிராவின் முன் நின்று தம்மை கலர் டீ.வி.யில் ரசித்துப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ''இங்க நிக்கறது அங்க தெரியுது பாரு கலர் கலரா''

''தபார்ரா நெம்பர் கூடத் தெரியுது! இது என்ன விலைங்க இருக்கும்?''

''வாட் பிரைஸ்? ஹௌ மச்?''

அமெரிக்கன் அவர்களுக்கு சாக்லேட் பட்டையும், நீள சிகரெட்டுகளும் கொடுத்தான்.

''யோவ் என்னய்யா பார்த்துக்கிட்டு நிக்கிறீங்க? அவன் படம் எடுத்துக்கிட்டு இருக்கான். புடுங்குய்யா!''

அரை மனதாக ஒரு போலீஸ்காரர் அருகில்செல்ல, ''டோண்ட் டச் இட்! எலக்ட்ரிக் ஷாக்'' என்றான்.

இப்போது அந்த வண்டி புறப்பட அதன் பின் சில தைரியச் சிறுவர்கள் தொடர காமிரா மணற்காட்டை மெல்ல தன் டேப்புக்குள் பதித்துக் கொண்டே மூலைக்குச் சென்றது. போலீஸ் வண்டி அவர்களைத் தொடர்ந்தது. ''இ சர்ச்! இ சர்ச்! ஜிம்!''

''நம்ம ஊரு எவ்வளவு பிரபலமாயிருக்க பாத்தீங்களா? டில்லியில் நியூஸ் சொன்னாங்களாம். லோக் சபாவிலே கேள்விகள் கேட்டாங்களாம்.''

''இன்னொரு மந்திரி வராங்களாம். போலீஸ்காரங்களை அவங்க பின்னாடி அனுப்பிட்டா மந்திரிக்கு பாதுகாப்புக் கொடுக்க வேண்டாமா?''

''இன்னொரு மந்திரியா?''

''ஆமாங்க. ரெண்டு கட்சித் தலைவர்களையும் கூப்பிட்டு இருக்காரு. சமாதானம் பண்ணி வெச்சு ரெண்டு பேரும் கை குலுக்கறாப்பல. சதாசிவமும் பாதிரியாரும் மந்திரி கூடச் சிரிச்சுக்கிட்டு கை குலுக்கறாப்பல போட்டோ பிடிக்கப் போறாங்க....''

கனகசபை, ''எனக்கு ஜீப் தர்றதாச் சொன்னீங்களே'' என்றான்.

''இருப்பா கொஞ்சம், நீ வேற! மந்திரி வர்றப்ப நீயும் இருக்கிறது நல்லது. ஸி. ஆர்.பி. வேற

வர்றதாச் சொல்லியிருக்காங்க. இந்த அமர்க்களமெல்லாம் முடிஞ்ச பிற்பாடு உன்னை அனுப்பி வைக்கிறேன்.''

''அப்ப நான் வீட்டுக்குப் போய் வரவா?''

''வேண்டாம். இங்கேயே இரு. யார்ரு வன், டிபன் வாங்கிவர டவுனுக்குப் போன ஆளு இன்னும் காணமே? அவங்களாம் வந்தா நல்லாத்தின்னுவாங்க.''

கனகசபை எதிர்த் திண்ணையில் உட்கார்ந்தான். தெருக் கோடியில் அந்த வெள்ளைக்காரன் வண்டி இரும்ப, காமிராக்காரன் ஒரு வீட்டின் முன்புறத்தில் யாரையோ மைக்கை முகத்தருகில் வைத்து பேட்டி கண்டு கொண்டிருந்தான். கனகசபைக்குக் குழப்பமாக இருந்தது. ஒரு சின்னப் பையன் ''அண்ணே சாக்லேட் தராங்க'' என்று அமெரிக்க சாக்லேட் பட்டையை வெயிலில் காட்டிக் கொண்டு ஓடினான். மற்ற சனங்கள் அந்த விந்தை வண்டியை நோக்கி ஓடிக் கொண்டிருந்தனர்.

கிரிஜா கிடைத்து விட்டாளா? ஏன் அதில் சந்தோஷமே இல்லை?

''சேச்சி மரிச்சுப் போயி என்னை உறப்பாணோ?''

''தேவகி. எனக்குச் சரியாத்தெரியவில்லை. அப்படித்தான் தோன்றுகிறது. அதன் பின்...''

''என்னைக் கல்யாணம் கழிக்குமோ?''

''நிச்சயம் தேவகி.''

''ஞான் நிங்கடேகூடே துபாயிலேக்கு வரட்டே?''

''நிச்சயம் உன்னை அழைத்துப் போய் விடுகிறேன் தேவகி.''

''அச்சனையும் கூட்டிக் கொண்டு போகாமோ?''

''நிச்சயம்.''

''ஞான் அவ்டே ஜோலியொக்க செய்து கொள்ளாம்.''

''சரி தேவகி.''

''எனிக்கு பண்டங்கள் ஒந்நும் வேண்டா''

''நான் விரும்பி உனக்கு நகை போடுகிறேன். இதோ பார் இது உனக்குப் பிடித்திருக்கிறதா?''

''எனிக்கி இதொன்னும் வேண்டா. நிங்ஙள் மாத்ரம் மதி.''

''நிச்சயம் தேவகி.''

''இனி இவ்டே எத்தர திவசம் தாமசமுண்டாவும்?''

''இரண்டு மாதம்.''

''அப்புறைக்கே பாஸ் போர்ட்டும் விசையும் கிட்டுமோ?''

''கிடைக்காவிட்டால் அதுவரை என் விடுமுறையை நீட்டுவேன்.''

''நிங்ஙடெ பார்ய மரிச்சு. என்டெ உண்ணியும் மரிச்சு. ரண்டாளுக்கும் ஒரே மாதிரி துக்கமாணு! அதாலே தம்மில் தம்மில் சமாதானப்பெடுத்தான் நம்மள் ஒன்னாயி சேர்ந்நது?''

''ஆம் தேவகி'' என்று அவன் அபாரக் கூந்தலை விரல்களால் வார அவள் அந்த விரலை எடுத்துத் தன்னுடைய சொந்தம் போல் கன்னத்தில் வைத்துத் தேய்த்துக் கொள்ள...

குற்றம்! குற்றம்! எல்லாமே குற்றம்! இப்போது கிரிஜா கிடைத்து விட்டதை எப்படி அவளிடம் சொல்லப் போகிறேன்?

''ஒதுங்குய்யா, ஒதுங்குய்யா! எங்க அந்த சதாசிவம்?''

''ஏங்க?''

''மந்திரி வராரு.''

''சதாசிவம் மெல்லத்தான்வருவாராம்.''

மந்திரி அம்பாஸிடர் காரில் வந்து இறங்கியதும் எல்லோரையும் அலுவலியமாக வணங்கினார். உதவிக் கலெக்டரை, கான்ஸ்டபிள்களை, கலெக்டரை — அவர் அருகில் உட்கார்ந்திருந்தவர் வெளிப்பட்டு ''என்ன எல்லா ஏற்பாடுகளும் செய்தாச்சா?''

''வருவாங்க. வந்துக்கிட்டு இருக்காங்க. முதல்ல மட சாப்பிடலாம்.''

''என்னங்க... அவரு போகலாம் இல்லையா? பாதிரியார் எங்க? மற்ற தலைவர்களெல்லாம் எங்க? என்னய்யா நீ ஏற்பாடு செய்திருக்க?''

''இப்ப என்ன பிரச்னே?'' என்றார் மந்திரி. அவர் கருப்புக் கண்ணாடியை நீக்கித் துடைத்துக் கொண்டபோது அந்தக் கண்களில் கொஞ்சம் அச்சம் இருந்தது.

''அவங்கள்ளாம் இதோ வந்துக்கிட்டு இருக்காங்க.''

''காத்திருப்போம். அதனால என்ன?''

''இவருதாங்க கனகசபை.''

''அப்படியா! வணக்கம்! வாழிய!'' என்றார் மந்திரி. ''இவரு....''

''இவரு சம்சாரத்தைத்தான் காணமின்னு புகாரியே முதல்ல ஆரம்பிச்சது!''

''அப்படிங்களா? உங்க மனைவி இறந்து போனதுக்கு நான் ரொம்ப வருத்தப்படறேன். அதற்கு அரசு ஆவன செய்யும்.''

''மனைவி கிடைச்சிட்டாங்க!''

''அப்படிங்களா, ரொம்ப மகிழ்ச்சி. காவல் துறை தன் கடமையைச் செய்வதில் துடிப்பும் ஆவலும் உள்ளவங்கதான்... இந்த ஊர்ல எவ்வளவு ஓட்டு உண்டுங்க ஏங்கதுரை?''

''அது ஒரு நூறு கூடத் தேறுதுங்க.''

''தாலி, அதுக்கா இந்த அல்லாட்டம்! வணக்கங்க. வாழிய நலம்!'' என்று மற்றொருத்தரைப் பார்த்துப் புன்னகைத்தார். இன்னைக்கு நாடே இந்தக் கிராமத்தைப் பத்திப் பேசிக்குது. தமிழ் நாட்டுக்கு ஒரு விதத்தில் பெருமை தரக் கூடிய விசயமில்லைங்களா! இருந்தாலும்....''

''வெள்ளைக்காரங்க டி.வி. போட்டோ எடுக்க வந்திருக்காங்க.''

''அப்படியா? கூப்பிடுய்யா அவங்களை! சமரச ஒப்பந்தத்தையும் போட்டோ எடுக்கட்டும்....''

''என்ன பாதிரியாரு தூங்கிக்கிட்டு இருக்காரா? நேரமாச்சில்லே?''

''முதல்ல டிபன் பண்ணிரலாங்க. அப்புறம் நெடுந்தூரம் போக வேண்டியிருக்குது.''

அப்போது தூரத்திலே அந்த ஆரவாரம் கேட்டது. (தொடரும்)




# வட்டமேஜை

● கல்கி தீபாவளி மலர் அற்புதமாயுள்ளது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் அமரர் கல்கி எழுதிய 'பேச்சின்பம்' இன்னும் கருத்தாழத்துடனும், சிறந்த ஹாஸ்யச் சுவையுடனும் விளங்குகிறது.

மணியம் செல்வனின் அட்டைப் படம் அமரர் 'மணியம்' அவர்களின் அட்டைப் படங்களை நினைவூட்டுகிறது. 'பேஷ், பேஷ்' என்று அமரர் கல்கி இருந்தால் பாராட்டி யிருப்பார்.

விஜயவாடா ச. ரா.

● இன்றைக்கு இரு பிரதேசங்களுக்கிடையில் தகராறுக்குள்ளாகிய காவிரியைப் பற்றி நமது பெரியவாள் எவ்வளவு அழகான தொரு — ரொம்பப் பேருக்குத் தெரியாத ஒரு கதையை எளிதாகச் சொல்லியிருக்கிறார்கள். பரித்யாகத்தில் ப்ரியாஸ்ரீ என்ற சொற்கள்தான் எவ்வளவு பொருளைத் தோற்றுவிக்கிறது! மலருக்கு இந்தக் கதை மணத்தை வாரி வீசுகிறது.

சென்னை-4 வெ. முத்துக்கிருஷ்ணன்

● இலங்கையில் வசந்த மாளிகை இரண்டு வருடங்களோடியது பற்றிய துணுக்கு சரியே. (31–10–82 இதழ்) சமீபத்தில் இலங்கை வானொலியில் அது பற்றிக் குறிப்பிட்டார்கள் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

14–11–82 தீபாவளிச் சிறப்பிதழில் கே. என். முருகேஷ் வட்டமேஜைப் பகுதியில் இத்துணுக்கை 'கப்ஸா' என்று கூறுவது நியாயமேயல்ல.

சென்னை-5 கை. இராமச்சந்திரன்

● ''விடிவதற்குள் வா'' கதைக்கு எதிர்ப்புத் தெரிவித்து ''நீங்கள் கேட்டவை'' பகுதியில் திரு டி. ஆர். கோபாலகிருஷ்ணனின் கேள்வி வியப்பளித்தது.

சமீப காலத்தில் எழுத்தாளர்களுக்குத் தோன்றியுள்ள மிகப் பெரிய சோதனை இது. இப்படி எடுத்ததற்கெல்லாம் எதிர்ப்புத் தெரிவிப்பதென்று ஆரம்பித்தால் கதைகள் எழுதவே முடியாது.

குத்தாலம் ராதா சம்பத்

● சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் எனது நண்பனுக்கு இடம் கிடைத்தது. காலேஜ் சேர்ந்தவுடன் அவனைப் பத்துப் பதினைந்து மாணவர்கள் சூழ்ந்துகொண்டு ஹோட்டலுக்கு அழைத்துச் சென்றனர். சர்வரிடம் தோசை கொண்டு வரச் சொன்னார்கள். நண்பனிடம் ஒரு ரீத் பேஸ்ட் பாக்கெட் கொடுத்து தோசையின் மேல் அந்தப் பேஸ்டையும் பிதுக்கித் தடவச் சொல்லி உண்ணுமாறு ஆணையிட்டனர். மிரட்டி உண்ண வைத்தனர். இரவு அறைக்குத் திரும்பிய என் நண்பன் வாந்தி எடுத்தான். கல்லூரி மாணவர்கள் தங்களோடு படிக்க வரும் மாணவர்களை இப்படியெல்லாம் துன்புறுத்துவதா?

நாகப்பட்டினம் ஜே. சிவகுமார்

● என்ன சார் அட்டையில் இந்திராவின் படம்; அதை அடுத்து திருவாளர் பொது ஜனங்களிடம் பிரதமரைப் பற்றி நல்லதும் கெட்டதுமான கருத்துக்கள்; அதைத் தொடர்ந்து நாட்டுக்குத் தேவையான—பிரதமர் ஆற்றவேண்டிய கடமைகள் பற்றிய தலையங்கம்; ஏதேது. தொட்டிலையும் ஆட்டி விட்டுப் பிள்ளையையும் கிள்ளி விடுகிறீர்களே! பலே ஆள் சார் நீங்கள்!

பரசலூர் ஆர். நாகராஜன்

● மாடர்ன் ஆர்ட் புரிந்ததோ இல்லையோ, மாடர்ன் ஆர்ட் என்றால் என்னவென்று புரிந்தது.

சென்னை-17 கே. சங்கர்

● அசோகமித்திரனை விடுங்கள்! அவருக்கென்ன எழுதித் தள்ளிவிடுகிறார். ஆனால் மாருதி! லதாவின் நடிமனை எத்தனை தத்ரூபமாக வரைந்து தன் ஓவியப் பணுவை நிலை நாட்டியிருக்கிறார்!

வியாசர் காலனி திருமதி நாராயணராவ்

● துணுக்கு 10ல் இடம்பெற்றுள்ள டைப்ரைட்டிங் மிஷினில் உள்ள ஹேண்டில் பார் வலப்பக்கத்தில் இடம் பெற்றிருக்கிறதே இது யாருடைய தவறு?

குளச்சல் எம். முகமது இப்ராஹிம்

● 'ஏஷியாட்-82' — ஒரு கண்ணோட்டம் கட்டுரை படித்தேன். சிறப்பாக இருந்தது. சிறு பிழையும் உள்ளது.

படகுப் போட்டிகள் 'பம்பாயிலும் பூனாவிலும் நடக்கப் போவதாகக் குறிக்கப்பட்டுள்ளது. படகுப் போட்டிகள் நடைபெற இருக்கும் இடங்கள் பம்பாய்—ஜெய்ப்பூர்.

விருதுநகர் என். தாயுமானசுவாமி



# சிஸ்டர் தேவகி

பஞ்சாமி

அந்த ஊரில் எல்லாருக்குமே தேவகி சிஸ்டர்தான். சிறு வயதிலேயே பெற்றோரை இழந்தவளுக்கு ஓர் அண்ணன் இருந்தான். சிறுமியா யிருந்தபோதே தேவகிக்கு மணமாகிவிட்டது. கணவன் இறந்துவிட்டான். வயது வந்தவுடன்தான், தான் விதவை என்று அறிந்து கொண்டாள்.

அன்றிலிருந்து முப்பது வருடங்களுக்கு மேல் உருண்டோடி விட்டன. தேவகியின் தலையில் நரை விழுந்து விட்டது. ஏன், தலையிலிருந்து உதிரக்கூட ஆரம்பித்து விட்டது.

கிராமத்தில் பல விஷயங்களுக்குத் தேவகிதான் வழிகாட்டி. எம்பிராய்டரியில் புதிய டிசைன் அறிமுகப்படுத்த வேண்டுமா? சிஸ்டரை அழையுங்கள். புது உணவு வகை எல்லோருக்கும் தெரிந்திருக்கிறதா? தேவகிதான் காரணம். வீட்டிலே யாராவது சிறுவர் அல்லது சிறுமி சொன்ன பேச்சுக் கேட்கவில்லையா? சிஸ்டர் வந்தால் அடங்கி விடுவார்கள். வயதுக்கு வந்த பெண்கள் வழி தவறுகிறாற்போல் நிலைமை உள்ளதா? தேவகி வந்து புத்திமதி சொன்னால் போதும்.

ஆக, தேவகி அந்தக் கிராமத்தில் அனைவருக்கும் ஒரு நல்ல உதாரணம்.

அப்போதுதான் கிராமத்தில் ஒரு வியாதி பரவியது. எல்லாரும் ஊரை விட்டுக் கிளம்பினார்கள். தேவகி மட்டும் அசையவில்லை. பிறர் துயர் தீர்ப்பதையே ஒரு நெறியாகக் கொண்டவளாயிற்றே? இயன்ற மட்டும் ஊரிலேயே இருந்து கொண்டு சிகிச்சை செய்து வந்தாள். தேவகியின் இதமான பேச்சும், கனிவான பார்வையுமே பலரைக் காப்பாற்றின.

வெள்ளம் கொஞ்சம் கொஞ்சமாக வடிவது மாதிரி நோயின் தீவிரம் குறைந்தது. மெல்ல மெல்லப் பலர் ஊர் திரும்பினார்கள். தேவகியின் வாழ்க்கை பழையபடி துவங்கியது. நதியில் குளிப்பது, சமையல், கோவிலுக்குப் போவது, வீட்டுக்குத் திரும்பினால் பாடம் கற்க வருகிற குழந்தைகள், தையல் தெரிந்து கொள்ளும் பெண்கள், எல்லாரது சுக துக்கங்களிலும் பங்கு கொள்ளும் தேவகிக்குப் பொழுதுதான் போதவில்லை.

நாட்கள் சென்றன. தேவகிக்குக் கண் பார்வை மங்குவது போலத் தோன்றியது. படிப்பதும், பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொடுப்பதும் தலை வலியை வரவழைத்தன.

கன்டோன்மெண்ட் ஆஸ்பத்திரியில் பணி புரியும் டாக்டருக்கு (இளைஞன்) இது எட்டியது. ''எப்போது வேணுமானாலும் தேவகி வரலாம்!'' என்றான். தேவகிக்கு முடியாது என்று யார் அந்த ஊரில் கூறுவர்?

தேவகி டாக்டரைப் பார்க்கச் சென்றாள். டாக்டர் அவளிடம் நெடு நேரம் பேசினார். கொஞ்ச மாதம் முன்புதான் அவர் மனைவி இறந்து விட்டாள். ''குழந்தையைப் பார்த்துக்கொள்வது கஷ்டமாக இருக்கிறது'' மனைவி இல்லாது வாழும் வாழ்க்கையைப் பற்றி ரொம்ப நேரம் சொன்னார்.

தேவகி ஏறிட்டு டாக்டரைப் பார்த்தாள். என்ன உயரம், கம்பீரம்! ஏன் இந்த டாக்

டர் தன்னிடம் இவ்வளவு அந்நியோன்ய மாகப் பேசுகிறார் என்று தோன்றியது. ஒரு நிமிடம் காரணமின்றி அவள் விரல்கள் நடுங்கின.

பிரெச்சை அறைக்குத் தேவகியை அழைத்துச் சென்றார். ஜன்னல் கதவுகள் எல்லாம் சாத்தப்பட்டிருந்தன. கதவை டாக்டர் மூடியதும் மேலும் இருள். அறை முழுவதும் இருளில் மூழ்கியதும் காலின் கீழ் பூமி நழுவுவது போல் உணர்ச்சி தேவகிக்கு ஏற்பட்டது. டாக்டர் தன் தோளை அழுத்த மாகப் பற்றுவது போல் உணர்ந்தாள்.

சடாரென்று மின்னல் வேகத்தில் அவள் கை பாய்ந்தது. கண்டபடி ஏசிவிட்டு வெளியே வந்தாள். டாக்டர் வெறுப்பார்வையுடன் பிரமித்து நின்றார். மன்னிப்புக் கேட்பது போல் ஏதோ முணு முணுத்தார்.

அறையில் நிகழ்ந்தது வெளியே பரவி விட்டது. கை, கால் மூக்குடன். கொஞ்ச நாள் டாக்டர் வெளியே தலை காட்டவே யில்லை. ஆனால் தேவகியின் பழக்கத்தில் மாற்றமே இல்லை.

படித்தவராகவும், பணக்காரராகவும் டாக்டர் இல்லா விட்டால் ஜனங்கள் அவரை என்ன செய்திருப்பார்களோ?

சில நாள் கழித்து டாக்டர் வேறொரு கல்யாணம் செய்து கொண்டார். குழந்தைக்காக என்று ஊரார் சொன்னார்கள். தேவகி மனத்துள் இகழ்ச்சியுடன் சிரித்துக் கொண்டாள்.

நாட்கள் சென்றன. டாக்டர் தன் மனைவியோடு செல்வதைப் பார்க்கும்போதெல்லாம் தேவகிக்குப் பழைய நிகழ்ச்சி ஞாபகத்துக்கு வரும். டாக்டர் தன் தோளை அழுத்தியது நினைவுக்கு வந்த உடனேயே உடல் எல்லாம் எரிவது போல் உணர்ச்சி ஏற்படும். அந்த நினைவு அவளுக்கு அவமானத்தை உண்டாக்கிற்று. வேலை செய்து கொண்டிருக்கும்போது, தோத்திரப் பாடல்கள் பாடிக் கொண்டிருக்கும்போது—



● தார்பஜன்சிங்

பஞ்சாபிக் கதை. எழுதியவர்: கர்த்தார் சிங் துக்கல். இண்டியன் எக்ஸ்பிரஸ் பொது மக்கள் தொடர்பு அதிகாரி திரு தார்பஜன் சிங் தேர்ந்தெடுத்த சிறு கதை.

தமிழ் வடிவம்: வாஞ்சுவன்.

திடும் திடுமென்று டாக்டரின் நினைவு எழும்.

நாட்கள் மேலும் நகர்ந்தன. அந்த இருளில் கனிவுடன் டாக்டர் பேசியதை அவளால் மறக்க இயலவில்லை. கூடவே தோளில் அழுத்தின வலுவான கைகள்.

நாட்கள் ஓடின.

இப்போது தேவகிக்கு யாரோ பின்புறம் நிற்பது போலவும், தோளில் கை அழுத்துவது போலவும் பிரமை அடிக்கடி ஏற்படலாயிற்று. ஆச்சரியம் என்னவென்றால், அந்தப் பிரமை முன்போல் இல்லாது இன்பமான கற்பனையாக இருந்தது.

போகப் போக தனிமை மகா கொடுமையாய் இருந்தது. யாராவது ஒருவர் பின்புறமாக ஓசைப்படுத்தாமல் வந்து, தன் தோளைப் பற்ற மாட்டார்களா என்று ஏங்கினாள். இனிமையான கானப் பாட்டு திடீரென்று நின்று போனால் — அவள் வருத்தப்பட்டாள்.

மாதங்கள் பறந்தன.

திடீரென்று யார் கூடவோ தேவகி ஓடி விட்டாள் என்ற செய்தி பரவியது. குதிரை மீது செல்லும் வாலிபன் ஒருவன், தாகத்துக்காக தேவகி வீட்டில் வந்து தண்ணீர் கேட்டானாம். குடித்துவிட்டுத் திரும்பும் போது, தேவகியையும் அழைத்துச் சென்று விட்டானாம்.

தேவகியின் வீடு தெரு முனையில்தான் இருந்தது என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் அவள் விருப்பத்துடனேதான் 'ஓடிப் போனாள்' என்பதை யார் அறிவர்?

## அடுத்த ஆசிய விளையாட்டு

அடுத்த ஆசிய விளையாட்டுக்கள் எங்கே நடக்க இருக்கிறது, சொல்லுங்கள் பார்க்கலாம்.

(அ) இலங்கையில்

(ஆ) மலேசியாவில்

(இ) ஜப்பானில்

(ஈ) ஆப்கானிஸ்தானில்

[illegible]

தகவல்: செனம்யா





# வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்...
# பற்சிதைவை எதிர்த்திடுவீர்




கோல்கேட்டின் நம்பகமான ஃபார்முலா, சிறப்புடன் செயல்பட்டு நீங்கள் பல்துலக்கும் ஒவ்வொரு முறையும் உங்களுக்கு புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம் அளிக்கின்றது. பற்களுக்கு ஆரோக்கியமும் உறுதியும் தருகிறது.

எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர் நாற்றத்தையும் பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச்சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பயன்: தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கு எதிராகப் பாதுகாப்பு, உறுதிமிக்க ஆரோக்கியமான பற்கள்.

ஆகவே, சாப்பிட்டு முடிந்தவுடனேயே மறக்காமல் கோல்கேட் டென்டல் க்ரீம் உபயோகித்து பிரஷ் செய்யுங்கள்.

## கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும் பெப்பர்மென்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது!

## பரமாச்சார்யாள் பவழ விழா

ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகளின் பீடாரோகண பவழ விழா (75 ஆண்டுகள்) சென்னையில் டிசம்பர் 6ம் தேதி முதல் ஆறு தினங்கள் மிகச் சிறப்பாக நடைபெறவிருக்கிறது. இந்து தர்ம மன்றம் பொறுப்பேற்று நடத்தும் இவ்விழாவில் அச்சமயம் சென்னையில் முகாமிடவிருக்கும் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராசார்ய ஸ்வாமிகளும் கலந்துகொள்கிறார்கள். பிரபல அரசியல் தலைவர்கள் ஆட்சித் தலைவர்கள் பங்கேற்கும் இவ்விழாவின் சிறப்பு அம்சமாக ஸ்வாமி சங்கரதாஸ் கலை அரங்கில் ஒரு புகைப்படக் கண்காட்சி நடக்கும். 75 வேத விற்பன்னர்கள் கௌரவிக்கப்படுவார்கள். ஆதி சங்கரர், பரமாச்சார்யாள் படங்கள் முத்துப் பல்லக்கில் பவனி வரும்.

# ஓய்வு பெற்றவர்களுக்கு...

"**நா**ங்கள் ரிடையர் ஆன கிழங்களாச்சே! தொழிலை விட்டுவிட்டவர்களாச்சே! எங்களால் என்ன உதவி பண்ண முடியும்?'' என்கிறீர்களா? உங்களால் முடியாதா? உங்களால்தான் ஸாந்தி முடியும் என்று உங்களைத்தான் இத்தனை நாழி எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன். நீங்கள் உங்களைப் பட்டுப்போன மரம் என்று நினைக்க வேண்டாம். மனஸ் வைத்தால் நீங்கள் தான் இந்தத் தேசத்தை தேவலோகமாக்கக் கூடிய கல்பக விருட்சங்கள் என்று நான் நினைக்கிறேன். தெய்வ பலத்தை நம்பி மனோ பலத்தோடு காரியம் செய்தால் அதுவும் தனக்காக இன்றி உலகத்துக்காகச் செய்தால் கிழத்தனத்தின் பலஹீனமும் ஓய்ச்சலும் இல்லாமல் யுவர்களை விட உத்ஸாகமாகப் பண்ணலாம். கிழவன் நானே சொல்கிறேன்.

பேரன் படிப்பு, பேத்தி கல்யாணம் என்றெல்லாம் இழுத்துப் போட்டுக்கொண்டேயிருந்தால் மற்றவர்களும் இதையே நினைத்துக்கொண்டு பிரலாபிக்க வேண்டியதுதான். ஓரளவு வயசான பிற்பாடாவது விவேக வைராக்கியாதிகளைப் பழக வேண்டாமா? கொஞ்சமாவது வானப்ரஸ்தாச்ரமிகளைப் போல வீட்டுப் பொறுப்புக்களை அடுத்த தலைமுறைக்கு விட்டு விட்டு தங்கள் தங்கள் ஆத்மாவைக் கவனித்துக் கொள்ள வேண்டும். உத்யோக காலம் முடிந்த பின் சொந்த பிஸினஸ் பண்ணலாமா? ஃபாக்டரி வைக்கலாமா? எக்ஸ்டென்ஷனுக்கு ட்ரை பண்ணலாமா? என்று தவித்துக் கொண்டிராமல் தன்னைக் கடைத்தேற்றிக் கொள்வதற்கான வழிகளைத் தேட வேண்டும். ஸ்வயோபகாரமில்லாமல் பரோபகாரமில்லை என்றேனே! அதனால் இதற்கு முன்னால் தெரிந்துகொள்ளாத வேத சாஸ்திரங்களை இப்போதாவது தெரிந்துகொண்டு, அவற்றின்படி (இதுவரை பண்ணாத) அனுஷ்டானங்களை இப்போதாவது பண்ண ஆரம்பிக்க வேண்டும்.

இதெல்லாம் பண்ணினாலும் உச்சிப் பொழுதுக்கு அப்புறம் நிறைய அவகாசம் இருக்கும். அதில் பரோபகாரங்கள் பண்ண வேண்டும்.

இருக்கிற ஓய்வை நன்றாகப் பிரயோஜனப்படுத்திக் கொண்டு ஸத் விஷயங்களைத் தாங்கள் படித்தும் கேட்டும் தெரிந்துகொள்வதோடு மற்றவர்களுக்கும் அவற்றை எடுத்துச் சொல்வது பெரிய உபகாரம்.

அது தவிர நீங்கள் எந்தத் தொழில் செய்தீர்களோ, அதை நாலு ஏழை இளைஞர்களுக்கு ஃப்ரீயாகச் சொல்லிக் கொடுத்து அந்த உத்தியோகத்துக்கான பரீட்சைகளுக்கு அவர்கள் போகிறதற்கு உதவி செய்யுங்கள். கொஞ்சம் வசதியாகப் பென்ஷன் வாங்குகிறவராயிருந்தால் இப்படி வித்யாதானம் செய்வது மாத்திரமல்லாமல் அவர்களில் ஓரிரண்டு பேருக்காவது அன்ன தானமும் சேர்த்துப் பண்ணுங்கள். சொந்தக் குடும்பத்துக்குச் சொத்துச் சேர்த்து வைத்தால் மட்டும் போதாது. வெளி மனுஷ்யாள் இரண்டு பேர் வயிறு குளிரப் பண்ணுங்கள். இப்படி ஆதரவில்லாதவர்களுக்கு அன்னம் போட்டு ஆதரிக்க ஆரம்பித்து விட்டால் சமுதாயத்திலேயே திருட்டுப் புரட்டு எவ்வளவோ குறையும். இல்லாமையால்தான் (வசதியிருக்கிறவர்களுக்கு மனமில்லாமையாலும்தான்!) அநேகர் ஏமாற்றுக்காரர்களாகவும், திருடர்களாகவும் ஆகிறார்கள்.

- ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்



# "காம்ப்ளான்® ஒண்ணுதான் சரி என் குடும்பத்துக்கு ...திட்டமிட்ட பரிபூரண உணவு."



"பல வேளைகள் சாப்பிடத் தவறி விடும் என் கணவருக்கு"



"சாப்பிடும்போது சண்டித்தனம் செய்யும் என் மகனுக்கு"



"நோயுடல் தேறிவரும் என் தாயாருக்கு"

## காம்ப்ளான்® ஒன்றுதான் எவருக்கும் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களால் முழுமை பெற்றது.

காம்ப்ளான் ஒன்றுதான் திட்டமிட்ட விஞ்ஞானக் கலவையாக உடலுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களை அளிக்கிறது: புரதங்கள், கார்போ-ஹைட்ரேட், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், உலோக தாதுக்கள். எனவேதான், டாக்டர்கள் பெரும்பாலும் சிபாரிசு செய்யும் ஆரோக்கிய பானமாக விளங்குகிறது காம்ப்ளான்.

கிடைப்பவை நால்வகை: இன்சுவை ரகங்களாக—சாக்கலேட் காம்ப்ளான், ஏலக்காய்-குங்குமப்பூ காம்ப்ளான், ஸ்ட்ராபெரி காம்ப்ளான், தவிர சாதா காம்ப்ளான்.






"அசதியிலும் சரிவர சாப்பிட முடியாத எனக்கு"

**திட்டமிட்ட பரிபூரண உணவு**

# காம்ப்ளான்®

GLC. 10-2015 TM



## அத்தியாயம் 13

## பயம் அறியாப் பேதை

மூத்தையனைப் போலீஸ் சேவகர்கள் வீதியில் சந்தித்து அழைத்துக் கொண்டு போனதை அச்சமயம் தற்செயலாக அந்தப் பக்கம் போக நேர்ந்த செங்கமலத்தாச்சி பார்த்துக் கொண்டிருந்தாள்.

இந்தச் செங்கமலத்தாச்சி, மூத்தையன் குடியிருந்த அதே வீதியில் அவனுடைய வீட்டுக்கு ஐந்தாறு வீட்டுக்கு அப்பால் வசித்தவள். அவள் ஓர் ஏழை ஸ்திரீ. காலை வேளையில்இட்டிலி சுட்டு விற்று ஜீவனோபாயம் நடத்தி வந்தாள். அவளுக்குப் பதின் மூன்று, பதினாலு வயதான ஒரு மகன் மட்டும் உண்டு.

சில சமயம் அவள் அபிராமி வீட்டுக்குப் போய்ப் பேசிக் கொண்டிருப்பாள். அபிராமியின் இனிய சுபாவமும், சமர்த்தும் அவளுடைய மனத்தைக் கவர்ந்திருந்தன. அபிராமி போன்ற ஒரு பெண் தனக்கிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்று அவள் ஒவ்வொரு சமயம் எண்ணுவதுண்டு.

அபிராமி அந்த மாதிரித் தனி வீட்டில் இருப்பதைப் பற்றிக்கூடச் செங்கமலத்தாச்சி சில தடவை பிரஸ்தாபித்திருக்கிறாள். அந்தத் தெருவிலே ஒரு வரிசைதான் வீடுகள். அநேகமாக எல்லாம் மடத்தைச் சேர்ந்தவையே. மூத்தையன் குடியிருந்த வீட்டுக்கு ஒரு புறத்தில் தோட்டம். இன்னொரு புறத்தில் பாழாகி விழுந்து கிடந்த ஒரு வீடு. அதற்கப்புறம் அந்த வீதியில் வீடே கிடையாது.

''இம்மாதிரி கோடி வீட்டில் போய்க் குடியிருக்கிறாயே, அம்மா! நீயோ பச்சைக் குழந்தை. அண்ணன் எங்கேயாவது ஊருக்குக் கிருக்குப் போகவேண்டியிருந்தால் என்ன பண்ணுவாய்? பேசாமல் என் வீட்டுக்கு வந்து என்னோடேயே இருந்து விடுங்

# கள்வனின் காதலி

## அமரர் கல்கி

கனேன்!'' என்று பல தடவை சொல்லியிருக்கிறுள் செங்கமலத்தாச்சி.

ஆனல், அபிராமி அதைக் காதில் வாங்கிக் கொள்ளவேயில்லை. பயம் என்றல் இன்னதென்று அவளுக்குத் தெரியாது. மேலும், அண்ணன் முத்தையன் இருக்கும்போது அவளுக்கு என்ன பயம்? யாரால் என்ன செய்ய முடியும். அவளை?

• • •



மூத்தையனுக்கு இரண்டு பக்கமும் இரண்டு போலீஸ்காரர்கள் நின்று அவனை அழைத்துக் கொண்டு போனதைப் பார்த்ததும் செங்கமலத்தாச்சிக்குச் சொரேல் என்றது. அவள் விரைந்து நடந்து நேரே அபிராமியின் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். தாழ்ப்பாள் போட்டிருந்த கதவை இடித்தாள். அபிராமி, அண்ணன்தான்வந்து விட்டான் என்றுஎண்ணிக் கொண்டு, சட்டென்று கண்ணீரைத் துடைத்து விட்டு எழுந்தாள். ஆனல் அண்ணன் குரல் கேட்காமல் இருக்கவே, கொஞ்சம் சந்தேகம் தோன்றி,''யார் அது?'' என்று கேட்டாள்.

''நான்தான் அபிராமி, கதவை திற''என்று செங்கமலத்தாச்சியின் குரல் கேட்கவும், ஜன்னலால் எட்டிப் பார்த்து, வேறு யாரும் இல்லை என்று தெரிந்து கொண்டு, கதவைத் திறந்தாள். அபிராமியின் கண்கள் அழுது அழுது சிவந்திருப்பதையும், கன்னமெல்லாம் கண்ணீர் வழிந்த அடை யாளங்கள் இருப்பதையும் கண்ட செங்கமலத்தாச்சிக்குப் பரபரப்பு அதிகமாயிற்று.

''அடி பெண்ணே! என்ன விபரீதம் நேர்ந்துவிட்டதடி! அங்கேயோ உன் அண்ணனைப் போலீஸ்காரர்கள் அழைத்துப் போகிருர்கள். இங்கேயோ நீ அழுது அழுது கண் கோவைப் பழமாய் ஆகியிருக்கிறது! முத்தையன் என்னடி பண்ணி விட்டான்? நல்ல பிள்ளையாச்சே!'' என்ருள்.

அபிராமிக்குத் திக்குத் திசை தெரியவில்லை. போலீஸ்காரர்களா? அண்ணனையா

அழைத்துப் போகிறீர்கள்? ஏன், எதற்காக?

ஃ ஃ ஃ

செங்கமலத்தாச்சி மெள்ள மெள்ள விசாரித்து அன்று நடந்ததையெல்லாம் தெரிந்து கொண்டாள். கடைசியில் ''ஐயோ! அந்தப் படுபாவி சங்குப் பிள்ளையின் கண் உன்மேலும் விழுந்து விட்டதா? அவன் பொல்லாத ராக்ஷசனாச்சே! அவனுடைய சூழ்ச்சிதான் எல்லாம்! என்னமோ பொய்க் கேசு எழுதி வைச்சு முத்தையனைப் போலீஸாரிடம் பிடித்துக் கொடுத்திருக்கிறான். ஐயோ பெண்ணே! உனக்கு இப்படி வெல்லாமா வரணும்?'' என்று அவள் புலம்பிக் கொண்டிருக்கும்போதே, வாசலில் ''எங்க அம்மா இங்கே இருக்காளா?'' என்று ஒரு சிறு பையனுடைய குரல் கேட்டது. ''வாடா, தம்பி!'' என்றாள் செங்கமலத்தாச்சி.

உள்ளே வந்தவன் அவளுடைய மகன். ''அம்மா! அம்மா! நம்ம முத்தையண்ணனைப் போலீஸ்காரங்க பிடிச்சுண்டு போய் விட்டார்களாம். மடத்துப் பணத்தை அண்ணன் திருடிட்டான் என்று கேஸாம். போலீஸ் ஸ்டேஷனில் கொண்டு வச்சு, அடி அடி என்று அடிக்கிறாங்களாம், அம்மா!'' என்று சொல்லிக் கொண்டு வந்தான்.

இதைக் கேட்டதும் அபிராமி 'ஹோ' என்று அலறி தரையிலேயே தலையை முட்டிக் கொள்ளத் தொடங்கினாள். செங்கமலத்தாச்சி சட்டென்று அவள் தலையைப் பிடித்துத் தன் மடிமேல் வைத்துக் கொண்டு, ''அசட்டுப் பெண்ணே! இந்த முட்டாப் பயல் ஏதோ உளறினால் அதைக் கேட்டுக் கொண்டு இப்படிச் செய்யலாமா? இவனுக்கு என்ன தெரியும்? போலீஸ் ஸ்டேஷனிலே அடிக்கிறதெல்லாம் அந்தக் காலம். இப்போ, கவர்னரா யிருந்தாலும் கூட ஒருத்தன் மேலேயும் கை வைக்கக் கூடாது. கை வைச்சால் கண்ணைப் பிடுங்கி விடுவார்கள். இதோ பார்! நீ கவலைப்படாதே. நான் வழி சொல்கிறேன். இந்த ஊர் போலீஸ் இன்ஸ்பெக்டர் வீட்டு அம்மாளை எனக்குத் தெரியும். உன்னை நான் அவளிடம் அழைத்துக் கொண்டு போகிறேன். அவளிடம் ஒன்று விடாமல் நடந்தது நடந்தபடி எல்லாம் சொல்லு. அந்த அம்மாள் ரொம்ப நல்லவள்! வீட்டுக்காரரிடம் சொல்லி முத்தையனை விடுதலை செய்யப் பண்ணுவாள். கிளம்பு, போகலாம். இனிமேல் இந்த வீட்டிலே நீ இருக்கிறது கூட அபாயம்!'' என்றாள்.

## அத்தியாயம் 14

## அபிராமியின் பிரார்த்தனை

அன்று இரவு சுமார் பத்து மணிக்கு ஸப் இன்ஸ்பெக்டர் சர்வோத்தம சாஸ்திரி கலெக்டரின் காம்பிலிருந்து வீட்டுக்குத் திரும்பி வந்த போது, உள்ளே மிகவும் இனிமையான யான பெண் குரலில் யாரோ உருக்கமாகப் பாடிக் கொண்டிருப்பதைக் கேட்டு வியப்பு அடைந்தார். சற்று நேரம் வாசலிலேயே நின்று கேட்டுக் கொண்டிருந்து விட்டு உள்ளே சென்றார். கூடத்தில், ஸ்வாமிபடங்களின் முன்னால் குத்து விளக்கு ஏற்றி வைத்திருப்பதையும் ஓர் இளம் பெண் உட்கார்ந்து பாடுவதையும், தமது மனைவியும் குழந்தைகளும் அந்தப் பாட்டில் அமிழ்ந்து போயிருப்பதையும் கவனித்தார்.

சாஸ்திரி கொஞ்சம் தொண்டையைக் கனைத்து, இரண்டு தடவை தரையைத் தட்டிய பிறகுதான் அவர்களுக்கெல்லாம் இவர் வந்திருப்பது தெரிந்தது. அபிராமி சட்டென்று பாட்டை நிறுத்தினாள். இன்ஸ்பெக்டரின் மனைவி உடனே எழுந்திருந்து அவரிடம் வந்து, ''இந்தப் பெண்ணுக்குப் பெரிய கஷ்டம் வந்திருக்

# வீட்டில் அனைவரின் கேசப் பராமரிப்புதானே? அதற்கு நம்பகமானது, விசேட ஃபேமிலி ஷாம்பூ பாமோலிவ்.



பாமோலிவ் ஷாம்பூ:
ரெகுலர், அல்லது
கூடுதலான
போஷாக்கிற்கு எக்




பாமோலிவ், எல்லா வகைக் கேசத்திற்கும் ஏற்ப விசேட முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. அது, வளமையான நவீன ஷாம்பூ, உங்கள் கேசத்தை நன்கு தூய்மை துலங்க வைக்கிறது. குழந்தைகளின் மென்மையான கேசத்திற்கோ மிகவும் ஏற்றது.

அது மட்டுமா? இவ்வகை ஷாம்பூக்களிலே சிக்கனமானது, பாமோலிவ் ஷாம்பூ—குடும்ப பட்ஜெட்டிற்கும் ஏற்றது.

**குடும்பத்தினர் கேசப் பராமரிப்புக்கு, நேசமானது-உங்கள் பட்ஜெட்டிற்கும் ஏற்றது**

GK&E.PS.7 TM

கிறது. எல்லாம் உங்களுடைய அழகான போலீஸ் இலாகாவினால்தான். இந்தப் பாவம் எல்லாம் யாருடைய தலையில் விடியப் போகிறதோ, தெரியவில்லை'' என்று படபடப்புடன் பேசத் தொடங்கினான்.

''முதலில் சமாசாரம் என்னவென்று சொன்னால், அப்புறம் பாவ புண்ணியத்தைப் பற்றி விசாரிக்கலாம்'' என்றார் சாஸ்திரி.

''அதெல்லாம் சொல்ல முடியாது. முதலில் இந்தப் பெண்ணைக் காப்பாற்றுவதாக நீங்கள் பிரமாணம் செய்யுங்கள். அப்புறம்தான் சமாசாரம் சொல்வேன்.''

''இதென்ன, சித்திரசேனன் கதையாக அல்லவா இருக்கிறது? நான் என்ன கிருஷ்ணனா, அர்ச்சுனனா? யாருடைய தலையையாவது யாராவது நாளைச் சாயங்காலத்துக்குள் வாங்கி விடுவதாக சொல்லியிருக்கிறார்களா?''

''போதும், போதும்! அர்ச்சுனனாயிருங்கள், கிருஷ்ணனாயிருங்கள், மன்மதனும் வேண்டுமானாலும் இருங்கள். இவனுடைய அண்ணனை உடனே ஜெயிலிலிருந்து விடுதலை பண்ணிக் கொடுத்தால் சரி'' என்றான்.

''இவனுடைய அண்ணனா? யார், மடத்துப் பணத்தைத் திருடிவிட்டதாகக் கார்வார் பிள்ளை வந்து ரிப்போர்ட் செய்தானே அந்தப் பையனா?''

''ஆமாம். அந்தக் கார்வார்பிள்ளையைத் தூக்கிலே போட்டாலும் பாதகமில்லை. அவன் வந்து சொன்னான் என்று நீங்களும் அந்தப் பையனை அரெஸ்ட் செய்யச் சொன்னீர்களே!''

• • •

பிறகு, மீனாட்சி அம்மாள், அபிராமியும் செங்கமலத்தாச்சியும் தெரிவித்தபடி எல்லா விவரங்களையும் ஸர்வோத்தம சாஸ்திரியிடம் சொன்னாள். சாஸ்திரி எல்லாவற்றையும் கேட்டுவிட்டு, ''அந்தச் சங்குப் பிள்ளை பெரிய அயோக்கியன் என்று எனக்குத் தெரியும். அவனுக்கு நல்ல பாடம் கற்பிக்கிறேன். பொய் வாக்குமூலம் கொடுத்ததற்காகப் பிடித்துத் தண்டித்து விடுகிறேன். முத்தையன் 'லாக்-அப்'பில் இரண்டு மூன்று நாள் இருந்தால்கூட மோசம் இல்லை. அப்படி இருந்தால்தான் அந்த அயோக்கியன் மேல் கேஸ் வலுப்படும். இந்தப் பெண்ணைச் சமாதானப்படுத்தி அனுப்பு'' என்றார்.



## ராஜீவ் யாரைச் சொல்கிறார்?

நடிகர் ராஜீவ் தன்னிடம் ஆட்டோகிராப் கேட்டு வரும் ரசிகர்களுக்கு 'நீ வாழ பிறரைக்கெடுக்காதே' என்று எழுதி அதன் கீழ் தன்னுடைய கையெழுத்தைப் போட்டுத்தருகிறார். ஏன்?

- கே. ராகவன்

அதற்கு மீனாட்சியம்மாள் ''ரொம்ப நன்றாயிருக்கிறது! இவன் எங்கே போவான், இத்தனை நேரத்துக்குப் பிறகு! அண்ணனைத் தவிர வேறு நாதி கிடையாது இந்தப் பெண்ணுக்கு. இட்டிலிக் கடை செங்கமலத்தாச்சி தற்செயலாய்ப் பார்த்து இங்கே அழைத்துக்கொண்டு வந்தாள். இல்லாவிட்டால் என்ன நேர்ந்திருக்குமோ தெரியாது. இராத்திரி இங்கேதான் இந்தப் பெண் இருக்க வேண்டும்'' என்றாள்.

இதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த அபிராமிக்கு, முத்தையன் இப்போது உடனே விடுதலையடைந்து வரமாட்டான் என்பது மட்டும்தான் மனத்தில் பட்டது. மீனாட்சியம்மாளின் ஆறுதல் மொழியினால் தேறுதலடைந்திருந்த அவளுக்கு இப்போது துக்கம் பொங்கிக் கொண்டு வந்தது. எவ்வளவோ அடக்கிப் பார்த்தும் முடியாமல் விம்மினாள்.

• • •

அந்தச் சமயம் வீட்டு வாசலில் ஆள் ஓடிவரும் சத்தம் கேட்டது. அடுத்த நிமிஷம் ஒரு போலீஸ்காரன் உள்ளே வந்து ஸப் இன்ஸ்பெக்டருக்கு ஸலாம் வைத்து நின்றான். ஸப் இன்ஸ்பெக்டர் ''என்னடா இது தடபுடல்? போலீஸ் ஸ்டேஷனைத் திருடன் கொண்டு போய் விட்டானா?'' என்றார்.

''இல்லை எஜமான் ''

''என்னடா பின்னே?''

''ஒன்றுமில்லே, எஜமான்... ''

''ஒன்றுமில்லாததற்கா இவ்வளவு தடபுடல்?''

''இல்லே, எஜ்மான்!''

''என்னடா இல்லே, முட்டாள்.''

''தடபுடல் இல்லே, எஜமான்! இரண்டு கைதிகள் லாக்கப்பிலிருந்து எஸ்கேப் ஆய்விட்டார்கள்,எஜமான்!''

''என்ன? என்ன? நிஜமாகவா?''

''ஆமாம், எஜமான்! குறவன் சொக்கனும், இன்று சாயங்காலம் அரெஸ்ட் செய்த முத்தையனும் ஓடி விட்டார்கள், எஜமான்!''

இதைக் கேட்டதும், இன்ஸ்பெக்டர், அவருடைய மனைவி, அபிராமி மூன்று பேரும் திடுக்கிட்டுப் போனார்கள். ஆனல் அவர்கள் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் இந்தச் செய்தி வெவ்வேறு வித உணர்ச்சிகளை ' உண்டாக்கிற்று. ''பாவிப்பயல் காரியத்தைக் கெடுத்துவிட்டானே'' என்று நினைத்தார் இன்ஸ்பெக்டர். கான்ஸ்டபிளைப் பார்த்து, ''போ, ஓடு! உங்களை யெல்லாம் முதலில் தொலைத்து விட்டு மறு காரியம் பார்க்கிறேன்'' என்று கூவினர். அவன் போனதும் உள் அறையிலிருந்த ரிவால்வரை எடுப்பதற்காக விரைந்து சென்றார்.

மீனுட்சி அம்மாளின் மனத்தில் பெருங் கலக்கம் உண்டாயிற்று. முத்தையன் ஓடிப்போனதன் விளைவுகளை நன்கு அறியவில்லை என்ருலும், ஏதோ விபரீதம் நடந்து விட்டதென்று மட்டும் அவளுக்குத் தோன்றியது.

பேதைப் பெண் அபிராமியோ, அந்தச் செய்தியைக் கேட்டுப் பெரிதும் சந்தோஷமடைந்தாள். தன் அண்ணன் ஜெயிலிலிருந்து தப்பித்துக் கொண்டு போய் விட்டான் என்பது மட்டுமே அவளுக்குத் தெரிந்தது. அதனுடைய பலாபலன்களை அவள் என்ன கண்டாள்? இன்ஸ்பெக்டர் ரிவால்வரை எடுத்துவர உள்ளே போனபோது அவர் மனைவியும் அவரைத் தொடர்ந்து போனுள். அப்போது அபிராமி கூடத்திலிருந்த படத்தின் முன்னல் கைகூப்பி நின்று, "ஸ்வாமி, பகவானே என் அண்ணன் போலீஸ்காரர்கள் கையில் அகப்படக் கூடாது'' என்று வாய் விட்டுப் பிரார்த்தித்தாள். உள்ளே யிருந்து அதைக் கேட்டுக் கொண்டே வந்த ஸப் இன்ஸ்பெக்டர் அபிராமியை இரக்கத்துடன் பார்த்து விட்டு, ''ஐயோ துரதிர்ஷ்டம் பிடித்த பெண்ணே!'' என்று வாய்க்குள் சொல்லிக்கொண்டு வெளியே சென்ருர்.

(தொடரும்)




# பாட்டரி ஏற்றுமதியில் இந்தியாவிலே முதலிடம்:
# அதற்கு ஒரு புதிய தோற்றம்.

"ஆம்கோ"வின் இன்றைய தோற்றம் ஆம்கோவை அப்படியே எடுத்துக்காட்டுகிறது. விரைந்து செயலாற்றும் திறனையும் முன்னேறிச் செல்லும் ஆர்வத்தையும் பிரதிபலிக்கிறது அதன் புதிய சின்னம்.

இன்று ஆம்கோ எதிர்காலத்தை எதிர்நோக்கத் தயாராக இருக்கிறது. தொழில்துறை மற்றும் ஆட்டோமோட்டிவ் பாட்டரிகளில் மேலும் மேலும் பல வகைகள் அசல் உறுப்பாகப் பொருத்தப்படுவதிலும் வெளி விற்பனை மற்றும் ஏற்றுமதியிலும் கூட இதன் மதிப்பு மேலும் மேலும் வளர்ந்து வருகிறது.

ஆம்கோ இந்தியாவில் பெற்ற வெற்றி, அயல்நாடுகளிலும் அதன் முத்திரையைப் பதிக்க உதவியது. இந்தியாவில் மிக அதிக அளவிலே பாட்டரிகளை ஏற்றுமதி செய்கிறது ஆம்கோ — ரஷ்யா, கிழக்கு ஜெர்மனி, யூகோஸ்லாவியா, குவைத், பஹ்ரெயின், அபுதாபி ஆகிய நாடுகளுக்கு இது ஏற்றுமதி செய்கிறது.

இந்த ஆண்டு மிக மிக அதிக அளவு ஏற்றுமதிக்கு— பத்து கோடி ரூபாய் மதிப்புள்ள ஆர்டருக்கு— ஆம்கோ ஒப்பந்தம் செய்துள்ளது. இந்த ஆர்டரை, லைக்கோ ஸ்டார்ட்டர், டிரெயின் லைட்டிங் மற்றும் டிராக்ஷன் பாட்டரிகளுக்காக ரஷ்யா கொடுத்துள்ளது.

ஆம்கோ பல இடங்களுக்கும் பரவிச் சென்று புகழ்பெறக் காரணம், புதுமையைப் புகுத்துவதில் அதற்குள்ள ஆர்வமே. ஆம்கோ செய்துள்ள பல சாதனைகள், இத் துறையில் தொழில் நுட்ப ரீதியில் முதன்முதலாகச் செய்யப்பட்டவையாகும்.

இந்த சாதனைகள் ஒவ்வொன்றின் பின்னணியிலும் நாங்கள் ஒரு குறிக்கோளுடன் செயல்பட்டோம்: வாடிக்கையாளர்களுக்குச் சிறந்ததொரு பாட்டரியை வழங்கவேண்டும் என்பதே அந்தக் குறிக்கோள். அதற்கெனப் பாடுபட்டோம்—அதற்கேற்ற பலன் கிடைத்தது.

**ஆம்கோ பாட்டரீஸ் லிமிடெட்**
சென்டினரி பில்டிங்
பெங்களூர் 560 001

## ஆம்கோ: ஒரு புதிய தோற்றம்.

HTK-ABL-1209A

# தி. ஜானகிராமன் - ஒரு அஞ்சலி

ஒருவர் அந்தரங்கமாகப் பழகி விட்டால் அவர் பேராற்றல் படைத்தவரானாலும் அவருடைய மனிதப் பண்புகள்தான் முதலில் நினைவுக்கு வருகிறது. வியாழன் நவம்பர் 18 பிற்பகல் சுமார் ஒரு மணிக்கு தி. ஜானகிராமன் இறந்துட்டார் என்ற செய்தி எனக்குக் கிடைத்தபோது அவர் எனக்காக வெயிலில் வாடி வதங்கிய தருணங்கள்தான் உடனே மனதில் தோன்றின. ஏனோ நாங்கள் இருவரும் நெடு நேரம் பேசியதெல்லாம் நல்ல வெயில் நேரமாக இருந்திருக்கிறது. அவர் டில்லிக்குக் குடி போகும் முன் சென்னையில் வசித்த நாட்களில் சைக்கிளில்தான் எங்கும் போவார், வருவார். இருபது வருடங்களுக்கு மேலாகிறது—என்னுடைய கதை முதன் முதலாக 'இல்லஸ்ட்ரேடட் வீக்லி'யில் வெளியாகியிருந்தது. ஜானகிராமன் வழியில் என்னைப் பார்த்து



சைக்கிளை நிறுத்தினார். நல்ல புரட்டாசி வெய்யிலைப் பொருட்படுத்தாமல் ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தோம். அவருக்கு மிகவும் பெருமை, சந்தோஷம்.

இன்னொரு சித்திரைப் பகல். கடுமையான வெயில். ''சிதம்பர சுப்பிரமணியத்துக்கு உடம்பு சரியில்லையாம். போய்ப் பார்த்துவிட்டு வருவோம்'' என்றார். அவர் வைத்திருந்த முகவரிக்குப் போனோம். அங்கு சிதம்பர சுப்பிரமணியன் இல்லை. அடுத்த வீட்டுக்குப் போனோம். அங்கும் இல்லை. ஒவ்வொரு வீடாக அந்தத் தெருவில் இருந்த அனைத்திலும் விசாரித்தோம். எழுத்தாளர் சிதம்பர சுப்பிரமணியன் பற்றிக் கேள்விப்பட்டது கிடையாது. அன்று மாலையே ஜானகிராமன் டில்லி திரும்ப வேண்டியிருந்தது. ஒரு வாரம் பொருத்துச் சரியான முகவரி தெரிந்து கொண்டு நான் சிதம்பர சுப்பிரமணியன் வீட்டுக்குப் போனேன். அந்தத் தெருவே வேறு. அவரை எனக்குப் பார்க்க வாய்ப்பில்லை. அன்று அவர் காலமாகி விட்டிருந்தார்.

இந்தத் தீபாவளிக்கு மறு நாள் நானும் எழுத்தாளர் ராஜாரங்கனும் ஜானகிராமனைப் பார்க்கப் போயிருந்தோம். அவர் வீட்டில் இல்லை. ஆஸ்பத்திரியில் சேர்த்திருந்தார்கள். நெருக்கடி ஒன்றும் இல்லை, சில பரிசோதனைகளை ஒழுங்காகச் செய்து பார்க்கத்தான்.... நல்ல வெயில். இப்போது சிரமப்படுத்த வேண்டாம். ஒரு மாலைப் பொழுதில் போய்ப் பார்க்கலாம் என்று திரும்பி வந்து விட்டோம். அந்த மாலை வருவதற்குள் அவர் போய்விட்டார்.

ஜானகிராமனின் கலையுணர்வு அவருடைய சிறுகதைகளிலும் நாவல்களிலும் எல்லாருக்கும் தெரியக் கிடைக்கும். ஆனால் சாதாரண அன்றாடப் பேச்சு வார்த்தைகளிலும் செய்கைகளிலும் கூட அவருடைய மென்மையான, பண்பட்ட தன்மை அவரோடு நெருங்கிப் பழகியவர்களுக்குத்தான் தெரியும். அவருக்கு யாரையும் வெறுக்க முடிந்திருக்க முடியாது. அதனால்தான் அவருடைய படைப்புக்களில் முற்றிலும் தீய பாத்திரம் என்று ஒன்று கிடையாது. குரோதமும் துவேஷமும் எப்போதோ வெளிப்படச் சந்தர்ப்பச் சூழ்நிலைதான் காரணம். ஜானகிராமன் நிறைய எழுதியும் சாவு அவருடைய கவனத்தை அதிகம் பெற்றதில்லை. மனித சிருஷ்டியின் நிரந்தரத் தன்மைதான் அவருள் நிறைந்திருக்க வேண்டும். தஞ்சாவூர் மண் வாசனையைத் தமிழ் உரைநடையில் வடித்தவர் என்று எல்லாரும் அவரை அடையாளம் கூறுகிறார்கள். அதைவிட தஞ்சாவூர் போன்ற நீண்ட பாரம்பரியம் உடைய கலாசாரத்தின் பிரதிநிதிகள் சமரசங்கள் மிகுந்த இன்றைய வாழ்க்கையில் தங்களைப் பொருத்திக்கொள்ள முயலும் ஆழ்ந்த துன்பத்தைத்தான் அவர் பிரதிபலிக்க முயற்சி செய்தார் என்பதுதான் பொருத்தமானது. ஜானகிராமனின் பெண் பாத்திரங்கள் பெரிதும் விவாதிக்கப்பட்டவை. ஜானகிராமனின் மகோன்னதப் பாத்திரங்களும் பெண்கள்தான். அவருடைய சிறந்த படைப்புகளாக 'மோக முள்'ளையும் 'அம்மா வந்தாளை'யும் கூறுகிறார்கள். ஆனால் அவருடைய பாத்திரங்கள் பரிபூரணமாக வெளிப்பட்ட நாவல் 'உயிர்த் தேன்' என்றே தோன்றுகிறது.

ஜானகிராமன் எழுதின நாடகங்கள் (நாலு வேலி நிலம், வடிவேலு வாத்தியார், டாக்டருக்கு மருந்து) எஸ். வி. சகஸ்ர

நாமத்திற்காக அவருடைய உந்துதலில் எழுதப்பட்டவை. ஜானகிராமனோடு நெருங்கிப் பழக எனக்கு வாய்ப்பு ஏற்பட்டதே சகஸ்ரநாமம் வீட்டில்தான். கலாசாகரம் ராஜகோபால், என். வி. ராஜாமணி, கு. அழகிரிசாமி, பி. எஸ். ராமையா, முகவை ராஜமாணிக்கம் என ஒரு தமிழ்க் கலை இலக்கியத்திற்கு சகஸ்ரநாமத்தின் சேவா ஸ்டேஜ் மையமாக இருந்தது.

யாரையும் உற்சாகப்படுத்துவது ஜானகிராமனின் இயல்பு. அதனாலேயே ஒவ்வொரு தலைமுறையிலும் அவருக்கு ஏராளமான நண்பர்கள் உண்டு. பல இந்திய மொழிகளிலும், ஆங்கிலத்திலும் ரஷ்ய மொழியிலும் அவருடைய நாவல்கள் மொழிபெயர்க்கப்பட்டு ரசிக்கப்பட்டிருக்கின்றன. உலகின் பல நாடுகளில் இலக்கியக் குழுவினர் மதிக்கும் தமிழ் எழுத்தாளர்களில் அவர் தனி இடம் பெற்றவர்.

சாகித்ய அகாடமி பரிசு ஜானகிராமனுக்கு அளிக்கப்பட்டது பற்றி எல்லா அரசு செய்தி ஸ்தாபனங்களும் குறிப்பிட்டிருக்கின்றன. ஆனால் அது அவருக்கு மறுக்கப்பட்ட பல ஆண்டுகளில் அகாடமி குழுவினரின் விவாதங்களை யாராவது வெளிப்படுத்த முடியுமானால் பல விசித்திரமான தகவல்கள் தெரிய வரலாம்.

மரணம் எப்போது நேர்ந்தாலும் அதிர்ச்சியாகத்தான் இருக்கிறது. ஜானகிராமன் மறைவு பற்றிக் கேள்விப்பட்டவுடன் நானும் ஐய்யய்யோ என்றுதான் கத்தினேன். வெயில் திடீரென்று சகிக்க முடியாத தீவிரத்தை அடைந்த மாதிரி இருந்தது. ஜானகிராமன் கடைசியாக சுவாசம்விட்டு அமைதி அடைந்தபோதும் நல்ல வெயில் அடித்துக் கொண்டிருந்தது.

நவம்பர் 19, 1982

-அசோகமித்திரன்




பாரதி நூற்றாண்டு

# டி.வி.எஸ்-50 மொபெட்



## பரிசுத்திட்டம்

**மொபெட் பரிசுபெறும் அதிர்ஷ்டசாலியின் பெயர் விரைவில் வெளியாகும். அதற்கிடையில் பாரதி காவலர் கே. ராமமூர்த்தி எந்தப் பத்தியைத் தேர்ந்தெடுத்து என்ன காரணம் கூறுகிறார் பார்ப்போம்.**

### மனிதர் யாரு மொருநிகர்!

மும்முறை விடுதலை என்று முழங்குகிற கவிதையின் முக்கியக் கரு, நடுநாயகமான ஏழையென்றும்... எனத் தொடங்கும் பாராவில்தான் இருக்கிறது. காரணம், முதலிலும் இறுதியிலும் தனித்துக் கூறுகிற கருத்துக்கள் ஜீவனுள்ள பொதுப்படை வெளிப்பாடுகளை இரண்டாவது பாராவிலே வழங்கியுள்ளது தெற்றெனத் தெரிகிறது. ஏழை என்றும், அடிமை என்றும் எனக் கூறுவதிலும், எவனுமில்லை ஜாதியில் என்பதாலும் முன்னும் பின்னும் கூறப்பட்ட கருத்துக்கள் மொத்தமாக இதிலே வலியுறுத்தப்பட்டு விட்டன. இழிவு கொண்டவர் இந்தியாவில் இல்லை என்ற வரிகளும் முன் பாரா முதல் நான்கு வரிகளுக்கு முத்திரை இடுகிற செம்மை சான்ற வரிகளாகும். கல்வி, செல்வம், மன மகிழ்வு, ஒருநிகர் சமானம், ஆக அத்தனை வார்த்தைகளும் பிணைந்து கூறும் கவிதையின் கருத்துக்களின் சீர்த்தியும், அழுத்தமும் இந்தப் பாராவிலேயே முழுமையாக இருக்கிறது. பறையர் புலையர் மற்றும் மாதர், ஆண் பெண் எல்லாருமே 'மனிதர் யாரும் ஒருநிகர்' என்பதிலே வந்து சேர்ந்து சங்கமித்து விடுவதாலும் நடுப் 'பாரா'வே எனக்குப் பிடித்தமான தலைசிறந்த 'பாரா' எனத் தேர்ந்தெடுக்கிறேன்.

ஏழையென்றும் அடிமையென்றும்
எவனுமில்லை ஜாதியில்
இழிவு கொண்ட மனிதரென்ப
இந்தியாவில் இல்லையே;
வாழி கல்வி செல்வ மெய்தி
மனமகிழ்ந்து கூடியே
மனிதர்யாரு மொருநிகர்
சமானமாக வாழ்வமே!



# துணை

“அம்மா, எப்படி நீ இந்த மாதிரி ஒரு முடிவுக்கு வந்தாய்?'' என்று ஆத்திரத்துடன், குரலில் சினம் வெளிப்பட, கேட்டான் அருண்.

வெளியே இருள் கப்பிக் கொண்டு வந்தது.

அறுபது வயதை நெருங்கிக் கொண்டிருக்கும் துர்க்காதாயி, மகனை ஏறிட்டுப் பார்த்தாள். தானுண்டு, தன் வேலையுண்டு என்று ஒதுங்கியிருப்பவள். வம்பு தும்புக்குப் போகாதவள். மருமகள் சுஜாதாவிடம், 'ஏன் இப்படிச் செய்தாய், அப்படிச் செய்தாய்?' என்று அதட்டி அறியாதவள். மகன் — மகள் — பேத்தி 'குருவிக் குட்டி' எல்லாரிடமும் அனுசரித்துப் போகிறவள்.



(மராத்தி)

''அப்படி என்ன பெரிய தவறைச் செய்து விட்டேன் நான்?'' என்று துர்க்கா தாயி கேட்டாள்.

மகனை என்ஜினியராக்கத் தன் ரத்தத்தை வியர்வையாக்கியவள். முப்பத்திரண்டு வயதுக்குள் கணவனை இழந்த பிறகு எந்த சுகத்தையும் அனுபவிக்காமல் சந்நியாசினி மாதிரி வாழ்ந்து வருபவள். ஒரு துணையும் இன்றி இதுநாள் வரை வாழ்ந்தது போதும். வாழ்வின் அந்தி மாலையில் தனக்கு என்று துணை ஒன்று தேவை என்ற கட்டாயத்தை உணர்ந்தவள்.

''பிரதம்-புவா எனக்கு இசை ஆசிரியர் மட்டுமல்ல அருண்! என் துணை. எனக்கு வழிகாட்டி. இந்த வயதில் நாங்கள் கேவலம் உடல் இச்சைக்கு மட்டுமே அடிமையாகி இணைய வேண்டிய அவசியம் இல்லை. நீயும் சுஜாதாவும் உங்கள் தொழிலிலும் வாழ்க்கையிலும் மூழ்கிப்போய் விட்ட வேளையில் எனக்குத் துணையாக வந்தவர் பிரதம்-புவா. என் சுக துக்கங்களில் வெகு காலமாகப் பங்கெடுத்துக் கொண்டிருப்பவர். அவர் மூலம் எனக்குச் செல்வமும்

தேவையில்லை, என்னுடைய பென்ஷன் பணமே எனக்குத் தாராளமாகஇருக்கிறது!''

''சரி அம்மா, அவரை நண்பராக வைத்துக்கொள்ளுங்கள். கல்யாணம் செய்து கொள்வானேன்? அதுவும் இந்த வயதில்?'' என்று குறுக்கிட்டாள் சுஜாதா.

''பிரதம்-புவாவை நினைத்தால் வெறுப்பாய் இருக்கிறது! அம்மாவின் மனசைப் பாழாக்கிய பாவி!'' என்றான் அருண்.

'ஆஸ்திரேலியாவிலிருந்து வந்த டாக்டர் தம்பதி – டாக்டர் டாட் அவர் மனைவி எமிலி அவர்கள் உபதேசம் செய்திருப்பார்களோ மாமியாருக்கு?' என்று சுஜாதா யோசித்தாள். எமிலியும் கணவனை இழந்த பிறகு, இதே மாதிரி ஒரே மகன் இருக்கும் பொழுது, வாழ்க்கையின் சாயங்காலத்தில் டாக்டர் டாட்-ஐ மணந்தவள்தானே!

உண்மையில் அந்தத் தம்பதியை வெளியே அழைத்துப் போனபோது, டாக்டர் எமிலி கூடக் கேட்டாள், துர்க்காதாயியை: ''நீங்கள் ஏன் இப்படி ஒரு துணையின்றித் தனியே இருக்க வேண்டும்? மறுமணம் செய்துகொள்ளக் கூடாது?''



ஸ்ரீமதி. மாயா ஜோஷி

மராத்திப் பத்திரிகை 'ஸ்த்ரீ' செப்டம்பர் இதழில் வெளியான சிறுகதையைச் சொல்லுகிறார் ஸ்ரீமதி மாயா ஜோஷி.

ஸ்ரீமதி மாயா ஜோஷி, மத்திய அமைச்சர் வஸந்த் சாத்தே அவர்களின் சகோதரி. தொழிலதிபரான கணவர் அருண்ஜோஷியுடன் சென்னையில் வசிக்கிறார். (புகைப்படம்: சுபா)

கதாசிரியர் விஜயா வாட் முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் இளம் கதாசிரியை.

தமிழ் வடிவம்: சாருகேசி

''இதுநாள் வரை உங்களுக்காகவே ஒரு தவ வாழ்க்கை வாழ்ந்தேன். என் வயது அறுபதை நெருங்குகிறது. இனி வாழப்போகும் ஒவ்வொரு வருஷமும் எனக்கு போனஸ் மாதிரிதான்! இனியாவது நான் எனக்காக வாழ ஆசைப்படுகிறேன் அருண்! என்னுடைய வாழ்க்கையில் தியாகம் ஒன்றே இதுவரை முக்கியமானதாக இருந்தது. உனக்கே தெரியும்... பிறர் என்ன சொல்லுவார்கள் என்ற கவலை எனக்கு இல்லை. நான் அதைப் பற்றிக் கொஞ்சமும் கவலைப்படவில்லை. நம்மோடு சம்பந்தமே இல்லாத நம் சுக துக்கங்களில் துளியும் பங்கு கொள்ளாத மனிதர்களைப் பற்றியும், அவர்கள் வம்புப் பேச்சுக்களைப் பற்றியும் நான் ஏன் கவலைப்பட வேண்டும்? உன் அப்பா போனதிலிருந்து இதுவரை நான் ஒரு கடுமையான முகத்துடன், கறாரும் கண்டிப்புமாக இருந்து வந்தேன். அந்தக் கடுமை என் இளமையைக் களங்கப்படாமல் காத்துக் கொள்ளத் தேவையாயிருந்தது. அது ஒரு முகமூடி மட்டுமல்ல. எனக்கு அது ஒரு கவசமாகவே இருந்தது!''

அருணுக்கும், சுஜாதாவுக்கும், பேத்தி 'குருவிக் குட்டி'க்கும் இப்போது துர்க்காதாயியைப் பார்க்கக் கஷ்டமாயிருந்தது. பேத்தி, ''நீங்கள் சும்மா இருங்கள் அப்பா! நீங்களும் அம்மாவும் எப்போதும் வெளியே போய்விடுகிறீர்கள்! பாட்டி தனியே எப்படிக் கஷ்டப்படுகிறாள் தெரியுமா? பிரதம்-புவா நல்ல மனிதர். பாட்டி அவரைக் கல்யாணம் பண்ணிக் கொண்டால் என்ன தப்பு?'' என்று கேட்டாள்.

''சாதாரணமாகத் திருமணம் என்றாலே உல்லாசமான உணர்ச்சிகள் கிளர்ந்து எழும். ஆனால் உல்லாசத்துக்காகவா நாங்கள் ஒன்று சேர்கிறோம்? அல்ல, அருண்! கச்சேரி முடிவில் பாடும் பைரவி ராகம் போல வாழ்வின் அந்தி மாலையில் நாங்கள் திருமணப் பந்தவில் இணைகிறோம்! எனக்கு இந்தச் சிறிய சந்தோஷத்தைக் கூட மறுக்காதே அருண்! எனக்கு நீயும் வேண்டும், 'பிரதம்-புவாவும் வேண்டும்.''

அருண் பரிவும் பாசமும் வெளிப்படையாகத்தெரியதுர்க்காதாயியைப்பார்த்தான். இத்தனை வருஷம் தன் சுகத்தைத் துறந்து ஒரு விரத வாழ்வு வாழ்ந்த மாமியாரை அன்போடு நோக்கினாள் சுஜாதா.

அருண் அம்மாவின் அருகில் போய் நின்று கொண்டு, ஒரு கரத்தால் அவளை ஆதரவுடன் தாங்கிக் கொண்டு, இன்னொரு கரத்தால் அவள் கண்களில் வழிந்த நீரைத் துடைத்தான். துர்க்காதாயியின் பார்வையில், இத்தனை நாள் அனுபவித்த தனிமை என்ற கொடுமையிலிருந்து, பிரதம்-புவா உருவில் ஓர் உண்மையான சிநேகிதம் இனி வாழ் நாள் முழுவதற்கும் கிடைத்ததை நினைத்து மகிழ்ச்சியும் அன்பும் வெளிப்பட்டன.

அந்த நீண்ட இரவு மெல்ல மெல்லத் தேய்ந்து, புலரியின் விடியல் நேர ஒளிக் கீற்று வானில் தோன்றிக் கொண்டு வந்தது.

# பிரிட்டானியா பால் பிஸ்கட்

வளரும் குழந்தைகளுக்கு
சுவையான துணை




சத்துமிகுந்த, சுவையான




## மில்க் பிக்கிஸ்

LINTAS-BBC.MB.3.2012 TM

"அத்தை! கதவை நன்ருய்ச் சாத்திக்கோ., நான் போயிட்டு வரேன்'' — நன்ருய் உரக்கச் சத்தம் போட்டுச் சொல்லி விட்டு ஷோபா வீட்டை விட்டு வந்தாள்.

அவள் ஸியால்தாவுக்குப் போக வேண்டும். அங்கே மருத்துவக் கல்லூரி ஆஸ்பத்திரியில் முடியாமல் கிடக்கிற உறவுக்காரரைப் போய்ப் பார்த்து விட்டு வர வேண்டும்.

வேகமாகப் போய்க் கொண்டிருந்த அவள் மேல் மோதி இடிக்கிற மாதிரி ஒரு சைக்கிள் விரைந்து வந்தது.

சடக்கென்று பாதையை விட்டு பக்கத்தில் தாவிக் குதித்து மரத்தைப் பிடித்துக் கொண்டாள் ஷோபா.

அவன் ஓர் இளைஞன்தான். நல்ல காலமாய் அவன் சைக்கிளில் அடிபடாமல் தப்பி விட்டாள். அந்த இளைஞன் மேல் பழியாய்க் கோபம் வந்தது அவளுக்கு.

''உனக்குக் கண் தெரியாதா? முன்னுல் போய்க்கிட்டிருக்கிறது தெரியல்லே... இப்படியா காட்டுத்தனமா வர்றது?'' — பெரிதாய்ச் சத்தம் போட்டாள்.

''இது குறுகலான பாதைதானே. நான் என்ன, வேணும்னு உன் மேலே மோத வந்தேன்... ஏதோ, கவனிக்கல்லே...''



(வங்காளி)

''உன்னுடை கெட்ட புத்தி நல்லாத் தெரியுதே... என் மேலே இடிக்கணும்னேதான் இப்படி நீ வந்தே....''

ஷோபாவின் வார்த்தைகளைக் கேட்டு அந்த இளைஞன் பெரிதாய்ச் சிரித்தான்.

''தப்பாரு! சும்மா சத்தம்போடாதே. உன் மேலே நான் வந்து ஏன் இடிக்கப் போறேன். பெரிய இவ... என்னிக்காச்சும் உன் மூஞ்சியைக் கண்ணுடியிலே பார்த்திருக்கியா நீ? போய்ப் பாரு. உன் லட்சணம் உனக்கே தெரியும்.''

# குற்றங்கள்

அந்த இளைஞன் பதிலுக்குக் கத்திவிட்டு, சைக்கிளில் ஏறித் தன் பாதையில் விரைந்தான்.

அவன் அப்படிக் கேட்டுவிட்டுப் போனது அவளை அதிரப் பண்ணியது. இப்போது அவளுக்கு முப்பத்தெட்டு வயசு ஆகிவிட்டது. தலைமயிரெல்லாம் கொட்டிச் சொட்டை விழுந்து முகமெல்லாம் சுருக்கங்கள் படர்ந்து இன்னும் அலங்கோலமாய்ப் போன தன்னுடைய முகத்தை நினைத்துக் கொண்டாள்.

உடம்பு மட்டும் வாளிப்பாக இருந்தால் ஆயிற்றா? அழகில்லாத தன்னுடைய முகத்தைக் கண்டு மிரண்டு போனவர்கள் எத்தனை பேர்?

முகத்தில் கொஞ்சமும் அழகில்லாமல் குரூபியான அவளுக்குத் திருமணம் செய்து வைக்க அவளுடைய அப்பா எவ்வளவோ அலைந்து பார்த்தார். ஒருவரும் ஷோபாவை மணந்துகொள்ள முன்வரவில்லை.

பெண்ணின் திருமணத்துக்காக என்று அப்பா சேர்த்து வைத்திருந்த பணமெல்லாம் இப்போது கொஞ்சம் கொஞ்சமாய்ச் சாப்பாட்டுக்குச் செலவாகிறது.

மருத்துவ மனையிலிருந்து உறவுக்காரரைப் பார்த்துவிட்டுத் திரும்ப ரொம்பவும் நேரமாகிவிட்டது. இரவு எட்டு மணியாகி இருட்டு நன்றாய்ச் செறிந்து கொண்டது.

தாமதமாக வந்த வண்டியில் ஏறி தாகுர் பூர் வருவதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது அவளுக்கு. இருட்டில் பயமாகவும் இருந்தது.

அதே சாட்டு வழிக் குறுக்குப் பாதை. மழையில் உடம்பு நனைய ஆரம்பித்தது. மழை வலுப்பதை அறிந்த அவள் எங்காவது சற்று ஒதுங்க எண்ணினாள். உடம்பும் குளிரில் நடுங்க ஆரம்பித்தது.

பாதையோரத்தில் இருந்த இடிந்து போன கட்டிடம் மங்கலாகக் கண்ணில் பட்டது. அதை நோக்கி விரைந்தாள். மழையில் மேலும் நனையாமல் உள்ளே நின்று கொண்டாள்.

பக்கத்தில் ஏதோ நிழலாடிய மாதிரி இருந்தது.

'பட்'டென்று வெட்டிய மின்னல் வெளிச்சத்தில் அவள் பார்த்தாள். ஓர் ஆள் நிற்பது தெரிந்தது.

அவனும் அவளைப் பார்த்து விட்டான். அவளை நெருங்கினான். ''நீ யாரு?'' என்று கேட்டபோது சாராய நெடி வேறு அவளைத் தாக்கியது.

''சத்தம் கித்தம் போடாதே... கத்தி வச்சிருக்கேன்.... குத்திக் கிழிச்சிருவேன்'' அவன் எச்சரிக்கை வேறு பண்ணினான்.

''என்னை விட்டுடு... நான் போறேன்'' என்று அவள் கெஞ்சினாள்.

''நீ யாரு? இங்க எப்படி வந்தே? எங்கியாச்சும் தப்புத் தண்டாவுக்குப் போய்ட்டு வர்ரவளா நீ?'' அவளைப் பற்றிக் கொண்டான். அவனுடைய கைபட்டு அவளுடைய மேலாடை கிழிந்து போனது. அவளுக்கு அது ஓர் ஆடவனின் முதல் ஸ்பரிசம்.

அவன் கரம் பட்ட போதில் இனம் புரியாத ஓர் உணர்ச்சி தன்னுள் பரவுவதை அவள் உணர்ந்தாள். அதுவரை, அந்த விநாடி வரை அவள் அனுபவித்திராத ஓர் உணர்ச்சி அது. அவனோடு போராடவோ மறுத்து விலக்கவோ அவளால் முடியாமல் போனது. அப்படியே தரையில் விழுந்தாள்.

மறுபடியும் ஷோபா கண் விழித்தபோது தான் அந்தக் கரடு முரடான பாதையில் கிடப்பதை உணர்ந்தாள்.

அடுத்த ரயில் வண்டியில் வந்து இறங்கியவர்கள் அந்தக் குறுக்குப் பாதையில் வந்தபோது அலங்கோலமாக கிடந்த அவளைப் பார்த்தார்கள்.



பி. கே. பட்டாச்சார்யா

வங்க மொழி மாத இதழ் 'நவகல்லோ'வின் ஏப்ரல் '92 புத்தாண்டு மலரில் வெளிவந்த சிறுகதை இது. 'நாரி ஜன்ம' என்ற தலைப்பில் மாயா போஸ் எழுதியுள்ள இந்தச் சிறுகதையைக் 'கல்கி' வாசகர்களுக்காகப் படித்துச் சொன்னவர் திரு பி.கே. பட்டாச்சார்யா. இந்தியன் ஆக்ஸிஜன் லிமிடெட் நிறுவனத்தில் வட்டார விற்பனை மேலாளராகப் பணியாற்றுகிறார் இவர். தமிழ் வடிவம்: சுப்ரபாலன்.

''இந்தப் பெண்ணை எவனோ பாவிப் பய கெடுத்துட்டான் போல இருக்கே...''

''ஊரு ரொம்பக் கெட்டுப் போச்சே. சட்டம் ஒழுங்கு எதுவுமே இல்லாமப் போயிடுச்சு... பொம்பளைங்க தனியா எங்கியுமே போய்ட்டு வர முடியல்லியே...''

தரையில் கிடந்த அவள் நினைத்துப் பார்த்தாள். இவ்வளவு பெரிய குற்றத்துக்குப் பொறுப்பெல்லாம் அவனுடையது மட்டும் தானா?

அவன் தன்னை நெருங்கியபோது சத்தம் போட்டிருக்கலாம். இருட்டில் அவனுடைய பிடியிலிருந்து தப்பி ஓடி வந்திருக்கலாம். குறைந்தபட்சம் அவனுடைய வெறிக்கு உடன்படாமல் தடுத்துப் பார்த்திருக்கலாம். தன்னால் அப்படியெல்லாம் செய்ய ஏன் முடியாமல் போனது!

நடந்துவிட்ட தவறுக்குத் தானும்தான் உடந்தையாய் இருந்ததாய்த் தோன்றியது அவளுக்கு!









என்ன ஆகுமோ, எப்படி நடக்குமோ
என்ற கவலைகள் கனவென மறைந்தன.
ஆசிய விளையாட்டுக்கள் அமர்க்கள
மாக ஆரம்பமாகி நடந்து வருகின்றன.
அதிகபட்ச மெடல்களைத் தட்டிச்
செல்லப் போவது ஜப்பானா சீனாவா
என்ற பரபரப்பு நிலவுகிறது.
முதல் இரண்டு நாள் காட்சிகளில்
சில:



7

# …களில்
# …யாட்டுக்கள்

(1) ஆசிய ஜோதியை ஏற்றுகிறார் பிரதமர். பக்கத்தில் விளையாட்டுத் துறை அமைச்சர் பூட்டா சிங்.

(2) ஆசிய விளையாட்டுக்களில் மும்முறை தங்கப் பதக்கம் பெற்றுள்ள ராம்சிங்கிடம் ஜோதியை அளிக்கிறார் பிரதமர்.

(3) ஜவாஹர்லால் நேரு ஸ்டேடியம் நிரம்பி வழிய ஆசிய விளையாட்டுக்களை ஜனாதிபதி துவக்கி வைக்கிறார்.

(4) ஆரம்ப நாளன்று இந்திய அணி வீர நடை போடுகிறது.

(5) இந்தியாவுக்கும் ஹாங்காங்குக்கும் இடையே ஹாக்கிப் போட்டியில் கோல் அருகே ஒரே பரபரப்பு.

(6) பளு தூக்கும் போட்டியில் வடக்குக் கொரியா வீரர் ஹோ பாங்-சோல் தங்க மெடல் தட்டிச் சென்றார்.

(7) குவெய்த்துக்கும் பாஹ்ரேனுக்கும் இடையே கூடைப் பந்தாட்டத்தில் தீவிர கட்டம். வெற்றி குவெய்த் பக்கமே.

(8) பங்களா தேஷுக்கும் இந்தியாவுக்கும் இடையே வாலிபால் போட்டி. இதில் இந்தியா வென்றது.

"यस्मिन्देशेहि यो जात : तस्मै तज्जौषधं हितम् ॥"

"எந்த தேசத்தில் (சீதோஷ்ண நிலையில்) எவன் பிறந்திருக்கிறானோ அவனுக்கு அந்நாட்டு மூலிகைகளே சிறந்த பலனை அளிக்கும்."

—(சரகஸம்ஹிதை)



**கும்பகோணம் "லலிதா பார்மஸி" மருந்துகளின் சிறப்பு அம்சங்கள்**

ஸ்ரீ காஞ்சி பெரியவர்களால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட பகவான் ஸ்ரீ தன்வந்திரியின் ஸன்னதியில் **மருந்துகள் தயாராவது.**

பல வருஷங்கள், முறைப்படி "ஆயுர்வேதத்தை" அத்யயனம் செய்த நிபுணர்களின் நேர்பார்வையில் **மருந்துகள் தயாராவது.**

எந்த மருந்தையும் எளிதில் முறைப்படி தயாரிக்க உதவியாகப் பல உயர் வைத்ய நூல்கள் கொண்ட புத்தகசாலை, சிறந்த மூலிகைசாலையுடன் இணைந்து விளங்குவது.

★

சிறந்த ஆயுர்வேத மருந்துகளுக்கு

# லலிதா பார்மஸி

(ஸ்தாபிதம் 1942)

தலைமை ஆபீஸ் :

**கும்பகோணம் Pincode: 612001**

போன் : 123

DRUG LICENCE No. 40/78

(மத்திய அரசால் கட்டுத் தொகைக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது.)

கிளைகள்

**மஹாதானத் தெரு, மாயூரம் 609001**
போன் : 379

**வடக்கு வீதி, சிதம்பரம் - 608001**

**நெ. 39, ரங்கநாதன் தெரு,**
**சென்னை - 600 017**
போன் : 441454

**நெ. 105, கச்சேரி ரோடு,**
**சென்னை — 600 004**
போன் : 73007

கடிதம் மூலம் வைத்திய ஆலோசனை பெற விரும்புவோர்கள்
50 பைசா தபால் தலையுடன் தலைமை அலுவலகத்திற்கு எழுதக் கோருகிறோம்.
(கடிதங்கள் ரகசியமாக வைக்கப்படும்.)







# அபஸ்வரங்கள் (மலையாளம்)



**ப**க்கத்துக் கோவிலிலிருந்து கதகளி வாத்தியங்களின் நாதம் பாய்ந்து வந்து-கொண்டிருந்தது. கார்த்திகை மாத வானம் நிறைய அழகாக நட்சத்திரங்கள். தூங்கப் போகிற மாதிரி அமைதியாக ஓடிக் கொண்டிருந்த சிற்றாறு.

''பொண்ணே! ஒண்ணும் மனசைப் போட்டு வீணா அலட்டிக்காதே. மனுஷ ஜன்மமெடுத்தாலே ஒவ்வொரு சமயம் ஒண்ணொண்ணு வரத்தானே செய்யும்'' என்கிறாள் கிழவி.

பேரன் மீது அப்படி ஒரு அபவாதம் கிளம்பி விருக்= வேண்டாம். சதுர்த்தி நிலாவைப் பார்த்த பாவமோ என்னவோ என்று அங்கலாய்க்கிறாள் அவள். ''நான் எவ்வளவோ பார்த்தாச்சு... மனுஷாளோட முரட்டுத்தனமான எண்ணம்தான் எல்லாம். கவலைப்பட்டு என்ன செய்ய?''

கிழவியின் சமாதானம் அவனுக்கு ஏற்க வில்லை. ''ஆனாலும் லாலுவின் பரிசுத்த மான மனசு வேதனைப்படுமே. அதை என்னால் சகிக்க முடியாதே'' என்று மனசுக்குள் புலம்பினாள் சுமதி டீச்சர்.

'மகனே! நீ வெற்றி நடை போட்டு வருகிறபோது உன்னை வரவேற்பதற்காகப் பாதை யெல்லாம் முட்களை யல்லவா வாரிப் பரப்புகிறது, இந்தப் பாழாய்ப் போன சமூகம்' என்று நினைத்துக் கொள்கிறாள்.

''சமூகம் ஒரு புழுத்த நாய்மாதிரி. தேகம் முழுவதும் அழுகிப் புண்ணானது அது. இருட்டைக் கண்டு மிரளும். வெளிச்சம் வந்தால் கத்திக் கூச்சல் போடும். இறைச்சித் துண்டைக் காட்டினால் அது வாலாட்டும். அதன் வாயில் கொடுத்துவிட்டாலோ நம் காலை நக்கிக் கொண்டு கிடக்கும்'' என்றாள் சுமதி.

''நீ சொல்றதெல்லாம் எனக்குப் புரியும் பெண்ணே... மத்தவாளுக்குப் புரியுமோ?'' என்றாள் இழனி.

''அவங்க என்னேயே கேட்டாங்க அம்மா. கேள்விப்பட்டோமே, நெஜம்தானான்னு... யார் யாரெல்லாமோ கேட்டாங்க... நான் என்ன சொல்லட்டும்? சரிதான்னு சொன்னாலும் நம்பப் போறதில்லே. இல்லேன்னு சொன்னாலும் பழிக்காமெ இருக்கப்போறதில்லே. சமுதாயத்துக்குத் தேவைப்படறதெல்லாம் சத்தியம் இல்லேம்மா. ஒரு கெடுதல் நடந்துடுமான்னு சந்தோஷப்படும். அப்படி ஒண்ணும் நடக்கல்லேன்னு சுவாரஸ்யப்படாது...''

அவளுக்குத் தன் மகன் மீது பரிபூரண நம்பிக்கை உண்டு. மற்றவர்கள் எப்படியோ நினைக்கட்டும். நினைத்துக் கொண்டபடியே கட்டிலில் வந்து விழுந்தாள்.

இழனி தூங்கியாயிற்று.

இருபத்தொரு வருஷங்களுக்கு முன்னால் சுமதி மச்சர் அவனைக் காதலித்தது ஒரு குற்றமாம். அதற்காகச் சமூகம் அவளைத் தனிமைப்படுத்தி வைத்தது. இந்தே ஆண்டுகள் வாழ்ந்து விட்டு அவன் செத்துப் போனான். அப்போதும் எல்லோரும் அவளைப் பார்த்துக் கைகொட்டிச் சிரித்தார்கள். அன்றும் இந்தக் இழனிதான் அவளுக்குத் துணை. இருட்டு வழியில் மிரண்டு போய் அவள் நின்ற வேளையில், அவள் கரங்களில் கிடைத்த அகல் விளக்காகச் சுடர்விட்டவன் இந்த வாசுதான். தன்னுடைய குழந்தை எப்படி யெப்படி யெல்லாம் இருக்க வேண்டுமென்று அவள் கனவு கண்டாளோ, அதற்குத் துளியும் பிசகாமல் உருவத்திலும் குணத்திலும் அமைந்தான் இவன்.

சிறு வயது முதலே இயற்கை அழகுகளை ரசிப்பான் வாசு. விண்வெளியை நிமிர்ந்து பார்த்து அவன் மெய்மறப்பதைப் பலமுறை அவள் கவனித்திருக்கிறாள்.

கல்லூரி வாசலை மிதித்ததும் வாசுவுக்குப் பொறுப்பு அதிகமானது. பொறுக்கியெடுத்த நண்பர்கள்தான் அவனுக்கு. ரஸ்ஸலும், வோர்ட்ஸ்வர்த்தும், மோஸசும், ஷாவும் — அவனுக்கு மிகவும் பிடித்தமானவர்கள். தன்னுடைய குண நலனைக் காப்பாற்றிக் கொள்வதிலேயே குறியாய் இருந்தான் அவன்.

அன்றைக்கு ஒரு நாள் அம்மாவிடம் ஒரு கற்றைக் காகிதங்களைக் கொண்டு வந்து போட்டான். அவ்வளவும் அவனுக்குப் பெண்கள் எழுதிய காதல் கடிதங்கள்தான். ''அம்மா இது பெண்களுக்கு ஒரு ஹாபி. படிச்சுட்டுக் கிழிச்சுப் போடு'' என்று சொன்னான்.

புகார்கள் எதற்குமே இடம் தராமல், சஞ்சலப்படாமல் இருந்த அவனைப் பார்த்து இப்படி ஒரு பிள்ளையைப் பெற என்ன பாக்கியம் செய்தேன் என்று நினைத்தாள் சுமதி.

''அவன் மீதா இப்படி அபவாதம்? இதை எப்படிப் பொறுத்துக் கொள்வது? நானும் ஒரு பெண்... அதுவும் தாய்... இதைப்பற்றி ஏன் சமூகம் நினைத்துப்பார்க்க மறுக்கிறது'' என்று குமுறினாள்.

காலையில்தான் அவனும் வாசுவும் வெளியே கிளம்பினார்கள். தெரு வழியே அவன் நடந்தபோது 'பெண்ட் ஆஃப் லக்' சொல்

## அது அவனுக்கே சொந்தம்

ஒரு வீட்டு வாசலில் புத்தபிரான் பிச்சைக்காகப் போய் நின்றார்.

அந்த வீட்டுக்காரன், அவரை ஏசிப் பேசி ஏளனப் படுத்தினான். அவர் மௌனமாக நின்றார். கோபமோ, முகச் சுளிப்போகூட இல்லை.

வீட்டுக்காரனுக்கு வியப்பு. இவ்வளவு திட்டியும் இவர் இப்படிப் பதிலே பேசாமல் நிற்கிறாரே என்று. கேட்டான். புத்தர் கேட்டார்:

''நீ கொடுக்கிற பொருளை நான் ஏற்காவிட்டால் அது யாருக்குச் சொந்தமாகும்?''

''சந்தேகமென்ன... அது எனக்கே தான் சொந்தம்'' என்றான் அவன்.

''அதே போலத்தான் தூஷணையான வார்த்தைகளும் அவதூறுகளும்'' என்று சொல்லி விட்டு நடந்தார் புத்தபிரான்.

- சுப்ரபாலன்



● திரு வி. பி. தனஞ்ஜயன்

மலையாள வார இதழான 'மனோராஜ்யம்' அண்மையில் வெளியிட்டுள்ள சிறு கதையின் தமிழ் வடிவம் இது. 'எல்லாத ஒளிவப்பு' என்கிற தலைப்பில் இதனை எழுதியுள்ளவர் 'பிந்து குரஜூர்' என்றும் வளர்ந்து வரும் எழுத்தாளர். கல்கி வாசகர்களுக்காகத் தனக்குப் பிடித்த மலையாளச் சிறுகதை என்று இதைத் தேர்ந்தெடுத்துத் தருபவர் பிரபல நாட்டியக் கலைஞர் திரு வி. பி. தனஞ்ஜயன்.

தமிழ் வடிவம்: சுப்ரபாலன்





## “பதினைந்து வருடங்கள் ஆனாலும் எங்கள் மெத்தை புத்தம் புதிது போல் இருக்கிறது.”

“எங்களுக்கு திருமணம் ஆகி 15 இனிய வருடங்கள் ஆகிவிட்டன. எல்லா இன்ப துன்பங்களிலும் இணைந்தே சென்றோம். ஆனாலும் வெற்றியுடன் மீண்டு வந்திருக்கிறோம். உளம் கவர் பரிசுகளும் உண்டு— இரண்டு இரட்டைவால் குழந்தைகள். அவர்கள் அடிக்கும் லூட்டியோ! மெத்தை மீது எந்நேரமும் விளையாடிக் கொண்டிருப்பார்கள்—குதித்தல், தள்ளி விடுதல், குத்துச்சண்டையிடுதல். நல்ல காலம்! இந்த மெத்தை நன்றாக உழைக்கிறது.”

“ட்யூரோப்ளெக்ஸ்”

- ஆஸ்டிரியாவின் தொழில் நுட்பத்தின் புரட்சிகரமான படைப்பு.
- இம்மெத்தையில் ரப்பரால் மூடப்பட்ட கோடிக்கணக்கான தென்னை நார் ஸ்பிரிங்குகள் இருப்பதால் உங்கள் முதுகுக்கு நேரான பக்க பலம் கிடைக்கிறது.
- இதில் அமைந்துள்ள பல்லாயிரக் கணக்கான துவாரங்கள் உண்மையிலேயே சுவாசிப்பதால், நீங்கள் உறங்கும் போது உஷ்ண காற்று உள்ளேயே இருப்பதற்கு வாய்ப்பில்லை.
- இது ஈரம் உறிஞ்சாது; சுத்தம் செய்யலாம்.

எல்லாவற்றிற்கும் மேலாக விலையும் மலிவானது. ஆடம்பரம் உண்டு ஆயின் டாம்பீகமில்லை.

1967லிருந்து உழைக்கின்ற ரப்பர் கொண்ட தென்னை நார் மெத்தைகள் தயாரிப்பவர்கள் அளிக்கும்.

# duroflex
mattresses

ட்யூரோப்ளெக்ஸ் காயர் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்.

ரெஜிஸ்டர்ட் ஆபீஸ்: கள்காம் அல்லேப்பி 688001 கேரளா போன்: 2187/3213

சேல்ஸ் ஆபீஸ்: 21 காமதேனு அன்னெக்ஸ் எம். ஜி. ரோடு, பெங்களூர்-560 008. போன்: 52172

ட்யூரோப்ளெக்ஸ் ஷோரூம்கள்

- சென்னை 235எ, அண்ணாசாலை, (மௌண்ட் ரோடு) அண்ணா பிளை ஓவர் அருகில் தேனாம்பேட்டை சென்னை-600 006. போன்: 444981
- கோயம்புத்தூர் 195E, க்ராஸ்கட் ரோடு, கோயம்புத்தூர் 640012
- பெங்களூர் 1/47, கே. எச். ரோடு (டபுள் ரோடு) பெங்களூர்-560 027

தமிழ்நாடு முழுவதும் ஸ்டாக்கிஸ்டுகள் உண்டு.

# பூவின்
# நறுமணத்தில்
# குளித்து மகிழ






# மைசூர்
# ஜாஸ்மின்

MCA/J/51/TAM

கர்நாடக சோப்ஸ் அண்டு டிட்டர்ஜெண்ட் லிமிடெட் அளிக்கும் தரமான தயாரிப்பு
விற்பனை செய்பவர்கள் : மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிட்., பெங்களூர்.

வித்தான் வழியனுப்பி வைத்தாள். பல்கலைக் கழகம் நடத்துகிற சிறுகதைப் போட்டியில் கலந்து கொள்வதற்காக அவன் போனான். புன்சிரிப்போடு கைகளை வீசிக் கொண்டு அவன் போன அழகைப் பார்த்து தெய்வத்தைப் பிரார்த்தித்துக் கொண்டு டீச்சரும் தன்னுடைய பள்ளிக்குப் போனாள்.

மத்தியானம் வரை குழப்பமே இல்லை. அப்புறம்தான் அந்த வார்த்தை பேரிடியாய் அவள் காதுகளில் விழுந்தது.

''சுமதி டீச்சரோட மகன் யாரோ ஒரு பெண்ணைக் கெடுத்துட்டானாமே'' என்று அவள் காது படவே பேசிக் கொண்டார்கள். அவள் நிலைகுலைந்து போனாள்.

குறிப்பிட்ட சம்பவம் நடந்தபோது அன்றைக்கு லாலு அந்த இடத்தில் கூட இருக்கவில்லை என்பதைக்கூட அறிந்து கொள்ளாமல் இப்படி விஷம் பரப்புகிறார்களே என்று வேதனைப்பட்டாள் சுமதி.

சாயங்காலம் லாலுவின் நண்பர்கள் இரண்டு பேர் வந்தார்கள். செய்தியறிந்து அவர்கள் படபடத்தார்கள். ''யார் சொன்னது இப்படி? அவர்கள் நாக்கை இழுத்து வைத்து அறுக்கிறோம்'' என்று கிளம்பிய போது அவர்களை அமைதிப்படுத்தினாள். ஆனாலும் அவளுடைய துயரம் கூடுதலாயிற்று.

''நாளைக்கு என் லாலு... அவன் காதில் இந்தச் செய்தி விழுந்தால் அவன் மனசு எப்படி வேதனைப்படும்... அவனால் இந்தக் கரிப் பூச்சைத் தாங்கிக் கொள்ள முடியுமோ'' என்றுதான் சுமதி கவலைப்பட்டாள்.

மறுநாள் சுட்டுப் பொசுக்கும் வெய்யிலில் மத்தியானம் வந்தான் லாலு.

மனசின் வேதனைகளை மறைத்துக்கொண்டு சிரிக்க முயன்றாள் சுமதி.

''என்னம்மா நடந்தது? ஏன் எப்படியோ இருக்கே?''

''ஒண்ணும் நடக்கலே மகனே... நீ போன காரியம் என்ன ஆச்சு?'' அவள் கேட்டாள்.

அவனுடைய முகம் கறுத்தது. வேதனையோடு கேட்டான். ''நீ கூடவா அம்மா நிஜத்தை மறைக்கிறாய்?''

''லாலு? உன்னை நான் நம்புகிறேன் மகனே! ஊரார் ஆயிரம் சொன்னாலும் அதை நம்ப வேண்டிய அவசியமில்லையே... நாக்கு ஓய்ந்து போனால் வம்பு தானே நின்று விடுகிறது'' என்றாள் அவள்.

''யார் சொன்னது இதையெல்லாம்?'' என்று அவன் ஆக்ரோஷமாக எழுந்தான்.

''நீ என்ன பழிவாங்கப் போகிறாயா, சொன்னவர்களை?'' என்று கேட்டாள் சுமதி. ''வேண்டாம் மகனே.. இதற்கெல்லாம் ஆத்திரப்பட்டுப் பழி வாங்குவதானால் உன்னை இவ்வளவு தூரம் இருபத்தோரு வருஷம் வளர்த்து ஆளாக்கினதெல்லாம் அர்த்தமில்லாமல் போகுமே? பழிவாங்கிய பிறகு உனக்கு மனசில் நிம்மதி கிடைக்குமா?''

''இல்லையம்மா.''

''இயற்கையை, அதன் சௌந்தர்யங்களை ரசித்து வழிபடுகிறவன் நீ. இன்றில்லாவிட்டாலும் நாளை இயற்கையே அவர்களுக்குப் பாடம் புகட்டும்'' என்றாள்.

''அப்ப... அவங்களை...'' என்று லாலு மறுபடி ஆரம்பித்தான்.

''நீ யாரையுமே லட்சியம் பண்ணாமல் நடக்க வேண்டும் மகனே. உன்னை விமர்சனம் பண்ணவோ, மதிப்புப் போடவோ கூட இந்த ஜனங்களுக்கு அருகதை இல்லை. நீ தைரியமாக இரு.''

அவன் மௌனமாக நின்றான்.

''நான் சொல்வதை நீ. நம்புகிறாயா மகனே?'' என்று கேட்டாள் அவள்.

கண்களில் நீர் பனிக்கத் தாயின் கரங்களை முத்தமிட்டான் லாலு.

''இயற்கையே நீதான் அம்மா. உனக்கும் இயற்கைக்கும் என்ன வேறுபாடு உண்டு? இரண்டுபேருமே களங்கமற்றவர்கள்தானே? உன்னுடைய வார்த்தைகளை அப்படியே ஏற்கிறேனம்மா.''

சுமதி டீச்சரின் கண்களில் மகிழ்ச்சி வெள்ளம் மின்னிப் பெருகியது.

## மறுபடியும் 12 பெயர்கள்

தங்கள் கல்கி 7–11–82 இதழில் காஞ்சிக்குப் பன்னிரண்டு மாற்றுப் பெயர்கள் இருப்பதாக ஒரு துணுக்கு பிரசுரமாகி இருந்தது. அதேபோல் எங்கள் மதுரைக்கும் பன்னிரண்டு மாற்றுப் பெயர்கள் உண்டு. அவை: 1. ஆலவாய், 2. கடம்பவனம், 3. தமிழ்க்கூடல், 4. நான்மாடக் கூடல், 5. கன்னி புரீசம், 6. சிவராஜதானி, 7. சிவநகரம், 8. சீவன்முக்திபுரம், 9. சிவலோகம், 10. சமஷ்டிவிச்சாபுரம், 11. துவாதசாந்தபுரம், 12. வெள்ளியம்பலம்.

ச. ஸ்ரீதர வித்யா சங்கர்

**ஆசிரியர் குறிப்பு: சரி! இதேபோல் வேறு ஏதேனும் ஊருக்கும் நிறைய பெயர்கள் இருக்கலாம். ஒப்புக் கொள்கிறோம். ஆனால் அதைத் துணுக்காக எழுதி அனுப்ப வேண்டாமே!**

• பெருக்கல் குறி மாதிரி இரண்டு சரிதாக்கள். ஒருவர் விசு மனைவி;மற்றொருவர் கிஷ்மு மனைவி.

முதல் சரிதாவுக்குக் குழந்தை பிறக்காத குறை. இரண்டாவது சரிதாவுக்கு குழந்தைகள் பிறப்பதே குறை. இந்த இரண்டு குறைகளையுமே தமது கதைக்கு நிறையாக்கிக் கொண்டிருக்கிறார் விசு.

இரட்டைச் சரிதாக்களிடம் பெரிய வித்தியாசம் வயிறுதான். நிறை கர்ப்பிணியாக வந்த சரிதா நினைவில் நிறைகிறார்—அடுத்தவர் கண்ணீரில் நிறைகிறார்.

கிஷ்மு சரியான விஷமு. ஐந்து குழந்தைகளைப் பெற்ற பிறகும் கூட பட்டப் பகலில் குழந்தை கண்களைக் கட்டிவிட்டு மனைவியுடன்.... சே! செல்லமாக மனைவியை 'மொட்டைக்கோஸ்' என அழைக்கும் இவர் மட்டும் என்னவாம்! உருவத்திலும் சரி, நடிப்பில் உள்ள தளதளப்பிலும் சரி, ஊட்டி மொட்டை கோஸ் மாதிரி! ரொம்ப வெயிட்!

இவரது அப்பாவாக வரும் ராஜாமணி நடிப்பில் ராஜா, பேச்சில் மணி! மகனையும் மருமகளையும் இரவில் ஒன்று சேர விடாமல் தடுக்க 'பசங்களுக்கு' விடிய விடிய டீ வாங்கிக் கொடுத்துப் படிக்கச் சொல்லும் போதும், பேய்க் கதை சொல்லும் பேரன் பேத்திகளிடம் மாட்டிக் கொண்டு மிரளும் போதும் நடிப்பில் ஜமாய்க்கிறார்.

ரங்கா — அருந்ததி டாக்டர் தம்பதிகளின் நடிப்பும் சேதுவிநாயகம்—சிவசங்கரி தம்பதிகளின் நடிப்பும் கதைக்குத் தேவையான அளவு ஒத்துப் போகின்றன.

ஆனந்தி கச்சிதமாக வந்து போகிறார். புதுப் பாடகர் பி. எஸ். ராமச்சந்திரன் பாடிய பாட்டில் எம். எஸ். வி. இன்னமும் கொஞ்சம் சிரத்தை எடுத்துக் கொண்டிருக்கலாம்.

மணலைக் கயிறாகத் திரிக்க முடியுமா என ஆரம்பத்தில் சந்தேகப்பட்டவர்களுக்கு விசு இதில் திரித்துக் காட்டியுள்ளார்—அழகான நைலான் கயிற்றை!

---

• ''நான்தான் அருக்காணிங்க. என் புருசனுக்கு என்னைப் புடிக்கலே. என்னை ஏமாத்திட்டு பெங்களூரிலே இன்னொரு கண்ணாளம் கட்டிக்கிறாரு. அவங்கதான் ராதா. நான் அவங்களூட்லேயே வேலைக்காரியா போறேன். கடைசிலே எப்படியோ குட்டு வெளியாகுது. என் புருஷனை (மோகன்) என்னோட ரயில் ஏத்திவுட்டுப்போட்டு ராதாம்மாவை 'கோபுரம்'னு சொல்லிடறாங்க.

அதுதாங்க எனக்குப் புடிக்கலே! கதை முழுக்கப் புருஷனை இன்னொருத்தி கூட வாழ விட்ட நான் கோபுரம் இல்லையாம். எம்புட்டுத் துரோகம் பாருங்க.

கிடக்குது வுடுங்க. ராதாம்மா நல்ல மாதிரி. என்னை பொம்பளை சலூனுக்குக் கூட்டிட்டுப் போறாங்க. நான் அழகாயிடறேன். சலூனுக்குப் போனா அழகு வேணா வரலாம். அறிவு எப்படிங்க வரும்? நாக்கை நீட்டறது எப்படிங்க போகும்? என்னமோ சொன்னாங்க! செய்துப்புட்டேன்.

சேகரய்யா நல்லாவே ஜோக் அடிக்கிறாருங்க. எனக்கு அஞ்சு முழப் பூ வாங்கிக் கொடுத்துட்டு ''உனக்கு எதுக்கு அஞ்சு முழம்? ஜடையே ஒரு முழம்தானே'' அப்படீங்கறாரு. அப்பப்போ 'அருக்...அருக்'குனு என்னைக் கூப்பிட்டுக்கிட்டு என் பின்னாலேயே சுத்தி என்னை என் புருசனுக்கு முன்னாலேயே லவ் பண்ற மாதிரி ஒரு 'பால்லா' காட்டுறாரு பாருங்க! படா இல்லாடிங்க! (நாக்கைக் கடித்துக்கொள்கிறார்)

கலைமணி சாரு கதை டாப் டக்கர். மணிவண்ணன் சாரு டைரக்ஷன்லே ஓமகுண்ட சட்டியெல்லாம் டமார்னு எகிறுது பாருங்க! அதுவும் டாப் டக்கர்.

கோபுரமா நிக்கறது டைரக்டர் மணிவண்ணன்தானுங்க''

(எச்சில் துப்பியபடி பேசி முடிக்கிறான் அருக்காணி - சுகாசினி.)



# கண்மணி பூங்கா

# ஊரும் உறவும்



● கிராமத்துக் கதை. சிறுகுடி குக்கிராமத்தில் டாக்டர் இல்லாத குறை. ஊரார் ஒன்று சேர்ந்து மாணிக்கத்தின் தம்பி பவுன்ராஜைப் படிக்க வைக்கிறார்கள். பவுன் சென்னைக்குப் போனதும் நாகரிக மோகத்தில் சிக்கிப் பணக்காரப் பெண்ணைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டு கிராமத்துக்குத் திரும்ப மறுக்கிறான். ஊராரின் ஏசலுக்கு ஆளான மாணிக்கம் ரோஷத்தோடு சென்னைக்குப் போய்த் தம்பியை அழைத்து வர என்ன வழியைக் கையாளுகிறார் என்பதே கதை.

மாணிக்கமாக சிவாஜி கணேசனும் அவரது தம்பி பவுனாக 'நிழல்கள்' ரவியும் நடித்திருக்கிறார்கள்.

தம்பியால் அவமானப் படுத்தப்பட்டுக் கொதித்து எழும் கட்டங்களில் சிவாஜியின் நடிப்பு உச்சம். 'நிழல்கள்' ரவிக்கு கிராமியக் களை சொட்டும் முகம். நிதானமாகவும் பக்குவமாகவும் நடிக்கிறார்.

ரவியின் காதலியாக வருபவர் ரஞ்சனி. அழகிலும் சரி நடிப்பிலு சரி. இவர் நிரஞ்சனி.

மாணிக்கத்தின் மனைவியாக வரும் கே. ஆர். விஜயா கணவரோடு தோள் கொடுக்கிறார் நடிப்பில்!

மேஜரின் கம்பீரமான நடிப்பும்,எ. வி.எம். ராஜனின் கண்ணியமான கலெக்டர் வேடமும் கண் முன் நிற்கின்றன.

மறக்க முடியாதவர் மகேந்திரன். போலி அப்பா வேடம் போட்டுக் கொண்டு போலி அம்மாவிடம் நெருங்கி சில்மிஷம் செய்யும் போது கிசிகிசியெனச் சிரிக்க வைக்கிறார்.

மேஜர் டைரக்ட் செய்துள்ள இரண்டாவது படம். கிராமியப் பண்பாட்டை உயர்த்திக் காட்டி நாகரிக நங்கையர்களுக்கு சூடு போட்டிருக்கிறார். கதையின் கிளைமாக்ஸில் யானையைப் புகுத்தி குழப்பாமல் நேரடியாகவே கதாநாயகனைத் திருந்த வைத்திருக்கலாம்.

படத் தலைப்பில் இல்லாத விறுவிறுப்பு படத்தில் இருக்கிறது. அது போதும்!

-திரைஞானி

✻ திரு கே. எம், பாலிகா

'உதயவாணி' 1981 தீபாவளி மலரில் வெளியான கன்னடக் கதையை எழுதியவர் சாந்திநாத் தேசாய். தமிழ் நாடு மின் வாரிய ஸிவில் இன்ஜினியர் கே. எம். பாலிகா சொல்லக் கேட்டு எழுதியவர்: வாதூலன்.

# என் மணம்

டாக்டர் சங்கரின் (பி.எச்டி.) நெஞ்சு மகிழ்ச்சியால் படபடத்துக் கொண்டிருந்தது. அதுவும் முந்தாநாள் ரமேஷுக்கு ஜுரம் என்று கேள்விப்பட்டவுடன் தன் மனசை மறைக்க முயல்வதற்குப் பட்ட பாடு!

"என்ன கௌரி! நீ கோலாப்பூருக்கு வரலையா?"

"வரணுமென்றுதான் ஆசை. ஆனால் ரமேஷுக்கு ஜுரம் குறையவில்லையே! என்னதான் டாக்டர் மருந்து கொடுத்தாலும் திரும்பவும் ஜுரம் உடனே வந்து விடுகிறதே! எப்படிக் கிளம்புவது?"

"சரி. உன் இஷ்டம்" என்றான் சங்கர். உள்ளுக்குள் சந்தோஷம் கொப்புளித்துக் கொண்டிருந்தது. சரஸைத் தனியாகச் சந்திக்க ஒரு வாய்ப்பு! கல்லூரி நாட்களில் அவளுடன் கடற்கரையில் சுற்றி... பழக்கம் காதலாகக் கனிந்து, கல்யாணமாக முடிவதற்குள் — பாழாய்ப் போன ஜாதி குறுக்கிட்டது. "ஸாரி. எனக்கு மட்டும் வருத்தமில்லையா சங்கர்? ப்ளீஸ் மறந்து விடுங்கள்" என்று கண்ணீரிடையே விடை கொடுத்தாள் சரஸ். யாரோ சௌகுலேயாம்; தொழிலதிபராம். அழைப்பிதழ் வந்தவுடன் சங்கர் கிழித்துப் போட்டான்.

அவன் வாழ்க்கையிலும் மாற்றம் ஏற்பட்டது. சரியான கட்டுப்பெட்டியான கௌரியை மணந்து கொண்டான். வெகு காலம் கழித்து ரமேஷ் பிறந்தான்.

இந்தச் சமயத்தில்தான் ஒரு கருத்தரங்குக்காக கோலாப்பூர் செல்ல வேண்டி வந்தது. மனம் துள்ளியது. சரஸை மீண்டும் பார்க்க ஒரு வாய்ப்பு. கௌரி தானும் வருகிறேன் என்று சொன்னாள். "அங்கே அம்பாளைத் தரிசிக்க வேண்டும்."

"ம்...சரி. நீயும் வாயேன்" என்று அரை மனசுடன் கூப்பிட்டான்.

ஆனால் நாள் நெருங்கியபோது ரமேஷுக்குக் காய்ச்சல் வந்தது. கௌரி வர மறுத்தவுடன்தான் எவ்வளவு நிம்மதி அப்...பாடா!

மகாலக்ஷ்மி எக்ஸ்பிரஸில் சங்கர் புறப்பட்டான். கூடவே அவன் கீழ் ஆராய்ச்சி செய்யும் காம்ளே வந்தான். பயணத்தின் போது சங்கர் ஒரு நிலையிலேயே இல்லை.

கோலாப்பூர் அடைந்ததுமே கெஸ்ட் ஹவுஸுக்குச் சென்றான். மடமடவென்று டெலிபோன் டைரக்டரியைப் புரட்டினான். சௌகுலே... ஒரு வழியாக நம்பர் கிடைத்தது.

சங்கர் காத்திருந்தான். நிமிடங்கள் யுகமாகச் சென்றன. "ஹலோ சங்கர்!"

அந்தக் குரலைக் கேட்ட மாத்திரத்தில் சங்கரின் உடலெல்லாம் சிலிர்த்தது. மனம் பரபரத்தது. குரல் தடுமாற, "உன்னை எப்போது பார்க்க வரலாம் சரஸ்?"

"ஈவினிங்கே வாருங்கள். கார் அனுப்புகிறேன்" என்று மறுமுனையிலிருந்து பதில் வந்தது. பேசுவது தன் பழைய காதலி சரஸ் என்றே நினைத்தான் சங்கர். ஆனால் இவள் மிஸஸ் சௌகுலே என்று அறியவில்லையே?

போனை வைத்து விட்டு ஸெமினாருக்குப் போனான். ஆனால் மனம் அதில் செல்லவே இல்லை. சொன்னபடி ஆறு மணிக்குக் கார் வந்தது. வீடு நெருங்கியதும் சரஸ் அவனைப் புன்னகையுடன் வரவேற்றாள். "வாருங்கள்; உங்கள் மனைவி வரலையா?"

வீட்டில் உரிமையோடு சென்று பார்த்தான். பெரிய வீடு. ஏன் இங்கேயே தங்கக் கூடாது? சொன்னால் என்ன? லேசாக அவனுக்குள்ளிருக்கும் பிசாசு தலை தூக்கியது.

''பிரமாதமா இருக்கே வீடு! இங்கேயே இருக்கலாம் போலிருக்கிறதே!''

''ஓ!'' என்றான் சரஸ். உடனேயே தொடர்ந்து. ''அவர் வெளியூர் போயிருக்கிறார். வந்துவிட்டால் தங்கலாம்!''

''ஓ....'' என்று சொன்னான் சங்கர். அவன் முகம் விழுந்து விட்டது. பழைய நினைவுகளையெல்லாம் எப்படிப் பெண்களால் பொசுக்க முடிகிறது? எப்படி பச்சோந்தி போல் நிறம் மாறிவிடுகிறார்கள்!

ஒரு பெருமூச்சுடன் சங்கர் விடை பெற்றான். ''நாளைக்குக் கட்டாயம் 'லஞ்'சுக்கு வாருங்கள். அவர் இருப்பார்'' என்று சரஸ் சொன்னதைக் காதில் போட்டுக்கொள்ளவேயில்லை. விரக்தியுடன், மறுநாளே பம்பாய்க்குத் திரும்ப எண்ணினான்.

ஸ்டேஷன் பிளாட்பாரத்தில்... என்ன ஆச்சரியம்! சரஸ், அவள் கணவர் சௌகுலே குழந்தை சுரேஷ்...

துயரமும், ஒரு விதமான நன்றி உணர்வும் சங்கரின் நெஞ்சை அடைத்தன. ரெயில் கிளம்புகிற வேளையில் அவசரமாக ஒரு பிஸ்கட் டின்னை வாங்கிக் குழந்தைக்குத் தந்தான்.

ரெயில் நகர்ந்தது.



# ரூபாய்க்கு மூணு கொலை

(காலையிலிருந்து மாலை வரை குட்டப்படும் அப்பாவி அப்பு, மாலைக்கு மேல் ரூபாய்க்கு மூணு கொலைகூடச் செய்யத் தயங்காத முரடன் ஆல்பிரெட்டாக மாறுகிறான். தன் கீழ் பாங்கில் பணியாற்றும் அப்புவைத் திட்டி அடக்கி, வதைத்த மானேஜர் அருந்ததி, உதவி கோரி ஆல்பிரெட்டைக் காண வருகிறாள். கண்ணையும் காதையும் மூடி ஆல்பிரெட்டின் ரகசிய இருப்பிடத்துக்கு அவளை அழைத்து வருகிறான் ஆல்பிரெட்டின் உதவியாளன் சம்பத். "கண்ணையும் காதையும் பொத்தினால் போதுமா?" என்று கேட்கிறான் ஆல்பிரெட்....)

ஆல்: அதையும் மீறி மூக்கால மோப்பம் பிடிச்சே இந்த இடத்தைக் கண்டு பிடிச்சுட்டான்னு?

சம்: அவங்களை ஏத்தி வந்ததே கருவாடு கொண்டு போற டெம்போதானே!

ஆல்: வெரி குட்! இங்க யார் வந்தாலும் ஜாக்கிரதை!

சம்: எதுக்கு சார் இவ்வளவு கெடுபிடி?

ஆல்: முட்டாள்! நீயும் நானும் இங்க உக்காந்துக்கிட்டு சமூக சேவையா செய்யறோம்? சமூக விரோதிகளுக்கு உறுதுணையாயிருக்கோம். நீ ஒருத்தன்தான் எனக்கும் வெளி உலகத்துக்கும் இடையில உள்ள தொடர்பு. மத்தபடி உலகத்துக்கு இந்த ஆல்பிரெட் மாயையாவே இருக்கணும்.

சம்: சரி... இங்க வர்ரவங்க வெளியே போய் உங்களைக் காட்டிக்கொடுக்க மாட்டாங்கன்னு என்ன நிச்சயம்?

ஆல்: மடையா! உனக்கு முடிதான் வளரலைன்னு நெனைச்சேன். இப்பத்தான் புரியுது. அறிவும் வளரலைனுட்டு. இங்க வர்ரவங்கள்ளாம் யாரு? சமுதாயவிரோதிகள். திருடனுங்க. நான்? அந்தத் திருடன்களைக் கொட்டிக்கிட்டிருக்கிற தேள். திருடனைத் தேள் கொட்டினா... கத்துவானா.... ம்....?

சம்: பாஸ்! உங்க சாமர்த்தியம் யாருக்கு வரும்? ஆண்டவனால கூட உங்களை நெருங்க முடியாது. பாருங்களேன். நானே உங்களை இங்க சாயந்திரம் ஆறிலேருந்து ஒன்பது மணி வரைக்கும்பார்க்கறனே தவிர, அதுக்கு முந்தி மத்த நேரத்தில நீங்க யாரு, எங்கே இருக்கீங்க, என்ன செய்யறீங்கன்னு எவ்வளவு முயற்சி பண்ணினாலும் கண்டு பிடிக்க முடியலியே!

ஆல் (திடுக்கிட்டு பிறகு சமாளித்துக்கொண்டு) நான் யாருன்னு தெரிஞ்சுக்கிறதில உனக்கு அத்தனை ஆர்வமா? வர வர நீயும் அந்தக் கோபி மாதிரியே ஆயிட்டு வர்ர!

சம்: யாருங்க கோபி?

ஆல்: உனக்கு முன்னாடி இங்க வேலை பார்த்தவன்.

சம்: இப்ப எங்க அவன்?

ஆல்: இங்க அவனுக்குச் சரிப்பட்டு வரலை. கும்பகோணத்தில ஏதோ ஸ்கூல்ல சைன்ஸ் டிபார்ட்மெண்ட்ல இருக்கிறதா கேள்வி.

சம்: அய்யய்யோ. அங்க அவன் உங்களைப் பத்தி உளறிட்டான்னு?

ஆல்: மடையா! அங்க அவன் என்னவா இருக்கான்னு கேக்கலியே? சயன்ஸ் லேபரட்டரில எலும்புக் கூடாத் தொங்கறான்.

சம் (பயத்துடன்): அவன் வேணா நன்றி கெட்டவனா யிருக்கலாம். நான் வந்து...

ஆல்: நீ படிச்சவன். நல்லவன். உன்னைப் போய் ஸ்கூலுக்கெல்லாம் தர மாட்டேன். மெடிகல் காலேஜ்ல பிரேதப் பரிசோதனைக்குத் தருவேன்! முட்டாள்! போ... போயி வந்திருக்கிற பாங்க்



வியட்நாம் வீடு சுந்தரம்

✖ "ரயில்வே ஸ்டேஷன் ஒலிகளை டேப் செய்து வெச்சிருக்கயில்ல... நான் டீபோனிலே பேசும்போது அதைப்போடு!"



✽ ''என்னைப்பற்றித்தெரிஞ்சுக்க அளவு மீறிஆர்வம் காட்டினவள் கதி என்ன ஆச்சு தெரியுமா?''

அம்மாவுக்கு டோக்கன் குடுத்து உள்ளே அனுப்பு. அவங்க கணக்கை இன்னிக்கே ஆரம்பிச்சு இன்னிக்கே முடிக்கணும்.

(சம்பத் செல்கிறான். மேடையில் விளக்குகள் அணைந்து எரிகின்றன. கண்ணைக் கசக்கியபடி மானேஜர் அருந்ததி நிற்கிறாள். சற்றுத் தள்ளி ஆல்ஃபிரெட்)

அரு: கண்ணை ஒரு மணி நேரமா கட்டிப் போட்டுட்டாரு. ஒண்ணுமே தெரியலே. எந்த இடம் இது?

(குழம்பியபடி சுற்று முற்றும் பார்க்கிறாள். அரை இருட்டில் நிழலாகத் தெரியும் ஆல்ஃபிரெட்டைச் சந்தித்ததும் கண்கள் நிலைத்து நிற்கின்றன.)

அரு: நீங்க....

ஆல்: ஆல்ஃபிரட்.

அரு: அப்பிடியா, ரொம்பச் சந்தோஷம். நான்தான் கருணா பாங்க் மானேஜர். அருந்ததி.

ஆல் (அருகில் வர முயல்பவளைத் தடுத்து): ஒரு நிமிஷம்.... துஷ்டனைக் கண்டா தூர விலகுன்னு சொல்லி யிருக்கே தவிர எவ்வளவு தூரம்னு நிச்சயம் பண்ணலே. எதுக்கும் அங்கிருந்தே பேசுங்க.

அரு: (தயங்கி) மிஸ்டர் சம்பத்தை யதேச்சையா சந்திச்சப்ப உங்களைப் பத்திச் சொன்னார்.

ஆல்: என்ன சொன்னார்?

அரு: ஆல்ஃபிரெட் தெய்வம் மாதிரி. கோயில்ல வச்சுக் கும்பிட வேண்டியவர்னு.

ஆல்: கல்லறைக்கு வெள்ளையடிச்சா கோயிலாயிடுமா?

அரு: நீங்க என்ன சொல்றீங்க?

ஆல்: உங்களுக்குப் புரியாது... ம்... சொல்லுங்க.

அரு: சம்பத் சொன்னாரு., மிஸ்டர் ஆல்ஃபிரெட் ரொம்ப நல்லவரு. ரொம்ப சார்ஜ் பண்ண மாட்டாரு. ரூபாய்க்கு மூணு கொலை கூடப் பண்ணித் தருவாருன்னு. எந்தப் பிரச்னையையும் சுலபமா முடிச்சுத் தரக்கூடிய தர்மாத்மா நீங்கன்னும் கேள்விப்பட்டேன். உங்களை நம்பி யாரை வேணும்னாலும் ஏமாத்தலாம்: காப்பாத்திக் கொடுப்பீங்கன்னு தெரிய வந்துச்சு. அதுனாலதான் உங்களைப் பார்க்க வந்தேன். உங்க மூலமா ஒரு உதவி தேவைப்படுது.

ஆல்: சொல்லுங்க.

அரு: இருட்டிலேயே இருக்கீங்களே. இப்பிடி வெளிச்சத்துக்கு வாங்களேன்.

ஆல்: என்ன மேடம், என் உதவியை நாடி நீங்களே வெளிச்சத்திலிருந்து இருட்டறை நாடித்தானே வந்திருக்கீங்க. நம்ம மாதிரி ஆட்களுடைய வாழ்க்கையே நள்ளிரவுக்குப் பின்னால்தானே ஆரம்பமாகுது. தைரியமாக் கேளுங்க.

அரு: நீங்க பேப்பர்ல பார்த்திருப்பீங்க. நான் ஒரு ஊழல்லே மாட்டிக்கிட்டேன். சுருக்கமாச் சொன்னா, எனக்கும் எங்க பாங்க் சேர்மனுக்கும்...

ஆல்: ஒருவித நெருக்கம். ஒரு மாதிரியான பழக்கம்....

அரு: இது நமக்குள்ளேயே இருக்கட்டும்.

ஆல்: கண்டிப்பா யார் கிட்டயும் சொல்ல மாட்டேன். இப்பல்லாம் கற்பு பறி போவதுகூடப் பெரிய காரியமில்லே. பறி போன விஷயம் வெளியே தெரியாம இருக்கிறதுதான் முக்கியமாப் போச்சு இல்லியா?...ஆமா...சேர்மென்தான் உங்களுக்கு ரொம்ப வேண்டியவராச்சே, அவரைக் கைக்குள்ள போட்டுக்கிட்டு விஷயத்தைத் திசை திருப்பிடறதுதானே?

புகைப்படங்கள்: ச. வெ. ரா. மோகன்

அரு: அதான் எனக்கும் தோணிச்சு. அதை எப்பிடிச் செயல் படுத்துறதுன்னுதான் தெரியலே.

ஆல்: ஒண்ணு செய்யுங்க. பாவத்தை நீங்க செஞ்சாச்சு. பழியை வேற யார் தலையில பாவது கட்டட வேண்டியதுதானே? யாராவது...

அரு: (யோசனை செய்தவளாக): ஒரு இளிச்சவாயன் இருக்கான். நான் எது சொன்னாலும் கட்டுப்படுவான். பிஸ்னஸ்ஸே தெரியாத அப்பாவி. 1982ல அப்பிடியொரு மந்த புத்தி படைச்ச மடையனைப் பார்க்கவே முடியாது. அவன் பேரு அப்பு. நீட்டின இடத்திலே யெல்லாம் கையெழுத்துப் போடுவான். நான் ஒண்ணு செய்யட்டுமா? ஒரு வெத்துப் பேப்பர்ல கையெழுத்து வாங்கிடறேன். அப்புறம் அதுக்கு மேலே நம்ம விருப்பப்படி எழுதிக்கலாம்!

ஆல்: இடியட்!

அரு: என்னங்க?

ஆல்: நான் அப்புவைச் சொல்றேன் மேடம். நீங்க போங்க. அந்த அப்புவை எப்பிடி வம்பில மாட்டி விடலாம்னு நான் தீர்மானம் பண்றேன். உங்க மாதிரி துணிச்சலான பொம்பிளையை நான் பார்த்ததே இல்லே.

அரு: என்னங்க பிரயோசனம்? எப்படியோ சேர்மனைக் கைக்குள்ள போட்டுக்கிட்டு ஒரு வாழ்க்கையை செட்டப் பண்ணிக்கிற நேரம் இப்படி ஆயிடிச்சே! இந்த இக்கட்டிலிருந்து காப்பாத்திட்டா உங்களுக்காக எதுவும் செய்வேன்.

ஆல்: மேடம், உங்க சேர்மனுக்காவது உண்மையா நடந்துக்குங்க.

அரு: நான் வரட்டுமா?

ஆல்: சம்பத்!

(சம்பத் வருகிறான்)

ஆல்: வழக்கப்படி இவங்க கண்ணைக் கட்டி ரோட்ல கொண்டு விடு.

(கண் கட்டப்பட்டு சம்பத்துடன் போகிறாள் அருந்ததி. ஆல்ஃபிரெட் சிரிக்கிறான்.)

ஆல் (தனக்குத் தானே): சறுக்கு விளையாட்டில மேல் நோக்கிச் சறுக்க முடியாது. கீழ் நோக்கிச் சறுக்க ஆரம்பிச்சுட்டா நிறுத்த முடியாது. அருந்ததி! அப்புவைத் தவிக்க வைச்சு வேடிக்கை பார்த்தியே. இப்ப உன்னைப் பத்தின தகவல்களை ஆதார பூர்வமாக அம்பலப் படுத்தறேன். நீ தவிச்சுத் திண்டாடறதை நான் வேடிக்கை பார்க்கறேன்...!.... சம்பத்! சம்பத்!

சம்பத்: யெஸ் பாஸ்! அவங்களை அனுப்பிட்டு வந்துட்டேன்!

ஆல்: எக்மோர் ஸ்டேஷனில் கேட்கும் சப்தங்களை டேப் பண்ணினோமே, அதை எடுத்து வா! இப்ப நான் ஃபோனிலே போசறப்ப அதைப் போடு!

(போலீஸ் ஸ்டேஷனுக்கு டயல் செய்கிறான் ஆல்ஃபிரெட்)

(தொடரும்)

## வாழைப்பழத்துக்கு ஏன் சிறப்பு

எல்லாப் பழங்களும் இருக்க இந்த வாழைப் பழத்துக்கு மாத்திரம் என்ன அத்தனை சிறப்பு? ஸ்வாமிக்கு வாழைப் பழத்தைத்தானே எல்லோரும் நிவேதனம்செய்கிறார்கள்?''என்றார் அரசர்.

அவைப் புலவர் கூறிய பதில்: வாழையில் மும்மூர்த்திகளுக்கும் பிரியமான வகைகள் இருக்கின்றன. அவர்களின் பெயரோடே அவை வழங்குகின்றன. பிரம்மாவின் பெயரை ஏற்றுக்கொண்டிருக்கிறது பூவன் வாழை. திருமாலின் பெயரைக் கொண்டது முகுந்தன்: [அதை இப்போது மொந்தன் என்று வழங்குகிறார்கள்.] சிவபெருமான் திருநாமத்தைப் பெற்றது பேயன் வாழை: பெயரோடல்லாமல் அவரைப் போலவே விபூதியையும் பூசிக் கொண்டிருக்கிறது!''

—மங்கை தேவன்

## முகத்தில் ஈ யாடியது

பம்பாய் டி. வி. நிலையத்தில் ஈக்களின் உபத்திரவம் அதிகமாக இருக்கிறது. செய்தி படிப்பவர்கள், நாடகங்களில் நடிப்பவர்கள் இவர்களின் முகத்தில் ஈக்கள் மொய்த்துத்தொந்தரவு கொடுக்கின்றன. அவர்கள் போட்டுக் கொள்ளும் மேக் - அப் தான் ஈக்களைக் கவர்ந்திழுக்கிறதாம்! ஈக்களைப் பிடிக்க அங்கு மின்சார யந்திரங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் வாரம் 300 ஈக்களைப் பிடிக்கின்றனவாம்!

—அனிதா ராமச்சந்திரன்

## உலகைப் பார்க்கலாம்

கடைக்காரன்: என்னய்யா ரூபா நோட்டு இது? நோட்டிலிருக்கிற ஓட்டை வழியா உலகமே தெரியுது!''

வந்தவன்: ''அப்புறமென்ன? அவனவன் உலகத்தைப் பார்க்க லட்ச லட்சமா செலவு செய்யறான். நீர் இந்த ஓட்டை ரூபா நோட்டு வழியா பார்த்துக்கலாமே!''

—எஸ். அன்பு மணி

# டூ-இன்-ஒன்






போர்ஹென்ஸ்
டபிள்–ஆக்ஷன்
டூத்ப்ரஷ் உங்கள்
பற்களை சுத்தம்
செய்யும்போதே
ஈறுகளையும்
தேய்த்துக்
கொடுக்கிறது.

**போர்ஹென்ஸ்**

டூ-இன்-ஒன்
டூத்ப்ரஷ்

அடல்ட்
மற்றும் ஜூனியர்

276 F-203 TAM

# மண்ணில் தெரியுமோ வானம்?

## 13

**வ**னஜாவின் கடிதம் வந்த மூன்றும் நாள் அவளது கணவர் நேரிலேயே வந்து விட்டார். சாயந்திரம் ஏழு மணிக்கு மேல் மணியும் சியாமளாவும் வீட்டில் இருந்த போதே ஆட்டோவில் வந்து இறங்கினார். அவரைச் சிறிதும் எதிர்பார்க்காத மணி, முகத்தில் கேள்விக் குறி தோன்ற வரவேற்றான்.

''வாங்க மாப்பிள்ளே... நீங்க வரப் போறதா வனஜா லெட்டர் கூடப் போடலியே?''

''திடீர்னுதான் புறப்பட்டு வந்தேன். அதனாலே அவளுக்கு லெட்டர் போட அவகாசமிருந்திருக்காது...''

''ஆத்துலே எல்லோரும் சௌக்கியம் தானே?''

''ம்... இங்கேயும் எல்லாரும் சௌக்கியம்தானே?''

அவர் உள்ளே வந்து அம்மாவை விசாரித்தார். காப்பி கொண்டுவந்த அகிலாவிடம் ''என்னம்மா எப்படி இருக்கே?'' என்று கேட்டார்.

''எனக்கென்ன அத்திம்பேர், நான் நன்னாத்தான் இருக்கேன். வனஜா எப்படி இருக்கா?''

''அவளுக்கும் என்ன குறைச்சல்? நன்னாத்தான் இருக்கா. கொஞ்சம் பலவீனமா இருக்கிறதா டாக்டர் அபிப்பிராயப்படறார்'' என்றபடி அவர் பின் பக்கம் போய் கை, கால், முகம் கழுவிக் கொண்டு வந்தார். அதற்குள், அகிலா மீண்டும் இன்



ஒருதரம் சாதம் வடிக்க உலை ஏற்றி, பகல் சாம்பாரும், ரசமும் போதுமா என்று பார்த்தாள். பின்னர் அப்பளம் பொரித்து, சாம்பார், ரசத்தைச் சூடாக்கினாள்.

எல்லோரும் சாப்பிட்டு முடித்ததும் வனஜாவின் கணவர் மெல்லத்தான் வந்த காரணத்தைத் தெரியப்படுத்தினார். கூடத்தில் உட்கார்ந்து அத்தனை பேருக்கும் பொதுவாகச் சொன்னார்.

''வனஜா மூணு நாலு லெட்டர் போட்டாளாம். உங்க கிட்ட யிருந்து பதில் வரவேயில்லேன்னு வருத்தப்பட்டுண்டா.''

அதற்கு யாரிடமிருந்தும் எந்தப் பதிலும் வராததால் மீண்டும் அவரே பேசினார்.

''அம்மா எப்போ வளைகாப்புன்னு என்னை நச்சரிக்கறா. நீங்க ஒரு தேதி பார்த்துச் சொன்னா நன்னா இருக்கும்...''

அதற்கும் எல்லோரும் மௌனமாக இருக்கவே அவர் சங்கடத்துடன் தொடர்ந்தார்.

''அதுக்குச் செலவாகுமேன்னு நீங்க கவலைப்பட வேணாம். உங்க நிலைமை எனக்குப் புரியறது. ஆனாலும் அம்மாவுக்கெதிரில் விட்டுக் கொடுக்கக் கூடாதுன்னு வனஜா அபிப்பிராயப்படறா... அதனால ஆபீஸ்ல லோன் போட்டு ஆயிரம் ரூபா வாங்கிண்டு வந்திருக்கேன். கொஞ்ச நாள் முன்னாலே அம்மாவுக்குத் தெரியாம வனஜா ஆசைப்பட்டான்னு காசு வளையல் ஒரு ஜதை பண்ணினேன். அதையும் கொண்டு வந்திருக்கேன். உங்க கிட்ட இரண்டையும் கொடுத்திட்டுப் போறேன். இதை வைச்சு வளைகாப்பை நடத்திடுங்கோ. அம்மாவும் சந்தோஷப்படுவா. வனஜாவுக்கும் திம்மதியா இருக்கும். அதைச் சொல்லிட்டுப் போகலாம்னுதான் வந்தேன். ஆபீஸ் டூர் கிளம்பினவனை உங்கப் பொண்ணுதான் இங்கே அனுப்பினா. அப்படிச் செய்யறதிலே உங்க யாருக்கும் எந்த விதமான கஷ்டமும் இருக்காதுன்னு நினைக்கிறேன். என்ன சொல்றேள்...?''

அவர் மிகவும் எதிர்பார்ப்புடன் மணியைப் பார்க்க, அவன் தன் மனைவியைப் பார்த்தான். அவளின் முக பாவத்திலிருந்து என்ன புரிந்து கொண்டானோ உடனே பேச ஆரம்பித்தான்.

''இது நாங்களாப் பண்ணி வைக்க வேண்டிய விஷயம்தான். திமர்னு அப்பா போயிட்டதால் அவர் காரியத்துக்கே ஏகப்பட்டக் கடனாயிடுத்து. அப்புறம் என்...''

அவர் இடைமறித்து, ''எனக்குப் புரியறது....'' என்றபடி எழுந்து போய் சூட்கேஸிலிருந்து வளையலையும், பணத்தையும் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தார்.

''இதை நான் கொடுத்த விஷயம் எங்காத்துல யாருக்கும் தெரிய வேணாம். கூடிய சீக்கிரம் நல்ல நாள் பார்த்து நீங்களே வந்து உங்க தங்கையை அழைச்சுண்டு வாங்கோ. இதுக்காகத்தான் நான் இங்கே இறங்கினேன். காலை ஏழுமணிரயிலுக்குத்திரும்பறேன்....''

''ஏன், இரண்டு நாள் தங்கிட்டுப் போகலாமே?''

''இல்லை. தங்கறதுக்கில்லை. போயாகணும்...'' என்றபடி அவர் படுக்கத் தயாரானதும், மணி தன் அறையிலிருந்து தலைகாணியும் பெட்ஷீட்டும் கொண்டு வந்து கொடுத்தான்.

''வேணும்னா என் ரூம் கட்டில்ல படுத்துக்கறேளா மாப்பிள்ளை?''

''வேணாம். கூடத்துலேயே படுத்துக்கறேன்...''

**அ**வர் கிளம்பிப் போனதும் மறுநாளே மணி பெரியப்பாவிடம் போனான். அவரையே நாள் பார்த்துச் சொல்லச் சொன்னான். அவர் சாஸ்திரிகளிடம் கேட்டு நாள் குறித்





# வாழ்க்கை

ஒரு காலத்தில்
இரண்டு குழந்தைகள் பிறந்தன.
குழந்தைகள் வளர்ந்து
இரண்டு வயதடைந்ததும்
கைகளால் அடித்துக்கொண்டார்கள்.
பன்னிரண்டு வயதடைந்ததும்
கம்புகளால் அடித்துக்கொண்டார்கள்.
நாற்பத்திரண்டு வயதடைந்ததும்
வெடி குண்டுகளை வீசிக் கொண்டார்கள்.
அறுபத்திரண்டு வயதானதும்
நோய்க் கிருமிகளை உபயோகித்து
தாக்குதலை நடத்தினார்கள்.
எண்பத்திரண்டு வயதில்
இருவரும் இறந்தார்கள்.
நூற்றாண்டு கழிந்தது.
ஒரு பூச்சி
அவர்கள் இருவரின் சவக்குழிகளில்
இரைதேடி ஊர்ந்து சென்றது.
வாழ்ந்த நாளெல்லாம்
சண்டையிட்டு மடிந்த
முரண்பாடான இரண்டு உடல்கள்
அங்கு புதைக்கப்பட்டிருப்பதை
மண்ணாகிப் போயிருப்பதை
பூச்சி அறியவில்லை.
அதே மண்தான்!
எல்லாம் அதே மண்!

**ஆங்கிலம்: இரண்டாம் உலகப்போர் காலத்தில் வாழ்ந்து 26 வயதில் மடிந்த ஜெர்மானியர் வொள்ப்றாங் போர்ஹெர்ட்**

**தமிழில்: சிங்கம்புணரி சே. ஆதிரை**



துத் தந்தபோது, உள்ளே இருந்து வந்த பெரியம்மா கேட்டாள்.

''ஏண்டா மணி சியாமளா குளிச்சிண்டு இருக்காளோ?''

''ஏன் பெரியம்மா தினமும்தானே குளிக்கறா...''

''போடா அசத்து. அதையாடா கேட்டேன். கல்யாணமாகி நாளாகப் போறதே இன்னும் ஒரு விசேஷத்தையும் காணுமேன்னு கேட்டேன்.''

''இப்பத்தானே மூணு மாசமாறது பெரியம்மா. இன்னும் ஏழு மாசம் போனாத் தானே விசேஷம் வரும்...''

''அப்படிச் சொல்லு. குழந்தை பாவம் இந்தச் சமயத்துலதானே வாய்க்கு ருசியா சாப்பிடணும்னு ஆசைப்படுவா. உங்கம்மாகிட்டச் சொல்லி பிடிச்சதா பண்ணிப் போடச் சொல்லுடா...''

''அம்மாதானே...'' என்று அலுத்துக் கொண்டான் அவன்.

''ஏண்டா, அவளிடம் இன்னும் விஷயத்தைச் சொல்லலியா?'' — பெரியப்பா கேட்டார்.

''இல்லே பெரியப்பா. சொன்னா மட்டும் பெரிசா அவ என்னத்தைப் பண்ணிடப் போறா...? சியாமளா சொல்ல வேணும்னு அபிப்பிராயப்பட்டா....''

''அதுவும் சரிதான். குழந்தை இந்த நிலைமையில் வீட்டு வேலையும் செய்துண்டு, எலக்ட்ரிக் ட்ரெயினில் இடிபட்டு நசுங்கிண்டு ஆபீசுக்குப் போயிட்டு வரணுமேடா. பேசாமல் அவா அம்மாவாத்துல யாவது கொண்டு போய் விடேன். ஆபீஸ் கிட்டே இருக்கு. குழந்தை பிறக்கிறவரை அங்கேயே இருக்கட்டுமே...''

''அதையேதான் சியாமளாவும் சொல்றா. அவாத்துலேயும் அவளுடைய அம்மா, அப்பாவும் கூட அவளைக் கொண்டு வந்து விடச் சொல்லி நச்சரிக்கிறா. இந்தச் சமயத்தில முடியுமான்னுதான் யோசிக்கிறேன். வனஜா வேற வரப்போறா.''

''வனஜா வந்தா அது அவ அம்மா பாடு. குதிராட்டம் தங்கை வேற வீட்டுல இருக்கா. பார்த்துக்க மாட்டாளா என்ன? அதுக்காக இந்தப் பொண்ணைச் சிரமப்படுத்த முடியுமாடா? பாவம், ஏற்கனவே அது இளைச்சுத் துரும்பாய் போயிடுத்து.''

''ஆகட்டும் பார்க்கலாம் பெரியம்மா... அப்ப நான் வரட்டுமா?'' — அவன் ஊஞ்சலை விட்டு எழுந்து கொண்டான்.

''பார்க்கலாம்னு அலட்சியமாச் சொல்லாதேடா. அவனவன் பெண்டாட்டியைத் தலைக்கு மேலே தூக்கி வெச்சுண்டு கொஞ்சறான். நீ என்னடான்னா இப்படி இருக்கே... முதல்ல அவளை அவாத்துக்கு அனுப்பு. எனக்கு ஒரு பிள்ளை இருந்து, மாட்டுப் பெண் வந்திருந்தா நான் எப்படியோ வச்சுண்டிருப்பேன். உங்கம்மாவுக்கு ஒண்ணும் தெரியலை. அவ என்னவோ ரூமிலே படுத்துண்டு காலத்தைக் கழிக்கறா...''

''சரி பெரியம்மா நான் வரேன்.''

''போயிட்டு வா. சியாமளாவை நான் கேட்டதாச் சொல்லு.''

# ஹேமா ஆனந்ததீர்த்தன்

## எழுதும் மினி தொடர்கதை

# பெண் ஆசை

## டிசம்பர் 19 இதழில் ஆரம்பம்

இது நடந்த நான்கு நாட்களுக்கெல்லாம் ஸ்யாமளாவின் அப்பா வீட்டுக்கு வந்திருந்திருந்தார். ஒரு டஜன் மஞ்சள் வாழைப் பழமும் ஒரு முழம் கதம்பமும் வாங்கிக் கொண்டு அகிலாவிடம் கொடுத்து விட்டுக் கூடத்தில் உட்கார்ந்து கொண்டார். அம்மா படுக்கையை விட்டு எழுந்து அதே இடத்தில் ஓரமாகச் சரிந்து உட்கார்ந்திருந்தாள். அவர் மெல்ல பேச்சை ஆரம்பித்தார்.

''ஸ்யாமளாவை ஆத்துக்கு அழைச்சுண்டு போகலாம்னு வந்திருக்கேன். மூணும் மாசமே குழந்தை ரொம்பப் பலஹீனமா இருக்காள். டாக்டர் கிட்டே காட்டினதிலே கொஞ்சம் ரெஸ்டுல இருந்தால் நல்லதுன்னு அபிப்பிராயப்படறா... அப்பதான் சுகப் பிரசவம் ஆகும்னு சொல்றா....''

'சுகப் பிரசவமா...! மூணும் மாசமா!'

அம்மா, அகிலா இரண்டு பேரும் சிறிது வருத்தத்தோடு பார்த்துக் கொண்டார்கள். இதைக்கூடச் சம்பந்தி வந்து சொல்லித்தான் தெரிந்து கொள்ள வேண்டியதாக இருக்கிறது. அவன் சொல்ல வேண்டாம். மணி சொல்லியிருக்கக் கூடாதோ?

''அவ குளிக்காம இருக்கிற விஷயமே எங்களுக்குத் தெரியாது. மூணு மாசம்னு இப்போ நீங்க சொல்லித்தான் தெரியறது.''

''குழந்தை சொல்ல வெட்கப்பட்டுண்டு சொல்லாமல் இருந்திருப்பாள்...''

''என் பிள்ளைகூட என்கிட்டே சொல்லலேயென்றதுதான் வருத்தமா யிருக்கு.''

''மாப்பிள்ளை ஏற்கனவே சங்கோஜி...''

அம்மா வருத்தம் தோய்ந்த புன்னகையோடு அவரைப் பார்த்தாள்.

''அவன் எப்படின்றது கூட நீங்க சொல்லித்தான் இனிமே நான் தெரிஞ்சுக்கணும்.''

அதைக் கேட்டதும் அவருக்குச் சுள்ளென்று கோபம் வந்து விட்டது.

''இதப் பாருங்கம்மா. இதையெல்லாம் என் கிட்ட ஏன் சொல்றீங்க? உங்க பிள்ளை வந்தால் கேளுங்க. நான் என் பொண்ணை அழைச்சுண்டு போகலாம்னு கேட்க வந்தேனே தவிர. இதையெல்லாம் கேட்க வரலே. அவளை அழைச்சுண்டு போய் உடம்பு கொஞ்சம் தேறினதும் கொண்டு வந்து விடறேன். மாப்பிள்ளையை நேரில் பார்த்துச் சொல்லிடறேன். வரேன்.''

அவர் விருட்டென்று எழுந்து போனதும் அம்மா எதுவும் சொல்லாமல் நின்றாள். சில விநாடிகள் அப்படியே நின்று பின் ''என்னப்பா ஈஸ்வரா...'' என்று அதே இடத்தில் படுத்துக் கொண்டு விட்டாள்.

அதைப் பார்த்ததும் அகிலாவுக்கு அம்மா மீதுதான் கோபம் வந்தது. தன் ஸ்தானத்தை விட்டுக் கொடுத்து, எதையும் கவனிக்காமல் மூலையில் முடங்கிக் கொண்டிருக்கிற விட்டேர்த்தியான போக்கின் மீது கோபம் வந்தது. இவள் தன் இடத்தில் ஸ்திரமாக நின்று மற்றவர்களையும் அவரவர் இடத்தில் நிற்க வைத்திருப்பாளேயானால் இதோ வந்து கோபமும், விரைப்புமாகச் சொல்லிவிட்டுப் போகிறாரே. இவரோ, மணியோ, அவன் மனைவியோ இப்படி நடந்து கொண்டிருக்க மாட்டார்கள். அதற்குத் தைரியமும் வந்திருக்காது... இந்த நிலைமைக்கு இறங்கிப் போயிருக்கவும் வேண்டாம்....

அகிலா ஒரு ஆழ்ந்த பெருமூச்சோடு உள்ளே போனாள்.

அன்று மாலை ஸ்யாமளா, மணி இரண்டு பேருமே ஆபீஸிலிருந்து சீக்கிரம் வந்தார்கள். அரை மணி நேரத்துக்கெல்லாம் ஸ்யாமளா ஒரு பெரிய சூட் கேஸில் தன் உடைகளையும், உடைமைகளையும் எடுத்துப் போட்டுக் கொண்டாள். மணி போய் ஆட்டோ கொண்டு வர, அம்மாவிடம் போய்,

''போயிட்டு வரேம்மா...'' என்ற ஒரு வார்த்தையில் விடை பெற்று வெளியில் போக–

பின்னாலேயே அவளின் சூட் கேஸைத் தூக்கிக் கொண்டு போன மணி–

''அவளை ஆத்துல விட்டுட்டு வரேன்'' என்பதைப் பொதுவாகச் சொல்லிக் கொண்டான்.

எதற்கும் அம்மாவிடமிருந்து எந்தவிதமான பதிலும் இல்லை.

வழக்கமான மௌனத்தில் இருந்தாள் அவள்.

(தொடரும்)

# இலவச பல்பொடி அவசியமா?

○ மு. சந்திரன், சென்னை-2

? புதிய எழுத்தாளர்களை அதிகம் அறிமுகப் படுத்திய பத்திரிகாசிரியர் யார்?

! அமரர் கல்கி. அவர் பத்திரிகை உலகில் ஏற்படுத்தியுள்ள பல ரிக்கார்டுகளை முறியடிக்க யாராலும் முடியாது.

○ எஸ். சுஜாதா, புதுவை-1

? வில்லன் நடிகர் அசோகனின் மறைவு, திரைப் படத் துறைக்கு பெரிய இழப்பா?

! இல்லையா, பின்னே! ஒவ்வொரு கலைஞரிடமும் ஒரு தனித் தன்மை இருக்குமாதலால் அந்த அளவில் பேரிழப்புத் தான். அசோகன் வில்லத்தனத்திலேயே நகைச் சுவையைப் புகுத்தி வெற்றி கண்டவர். அவரது ரசிகர்களின் வருத்தத்தை விட, அவரை நன்கறிந்த நண்பர்களின் துயர் அதிகம். காரணம் படத்தில் அவர் வில்லன்; பழக பச்சைக் குழந்தை. சக நடிகர்கள், தொழிலாளர்கள் அனைவரையும் 'நல்லா இருக்கியா ஐயா' என்று குசலம் விசாரிப்பார். தேவையுள்ளவருக்குப் பண உதவி செய்வார். ஒரு நாள் இருபது முப்பது நரிக் குறவர்கள் அவரைக் காண வீட்டு வாசலுக்கு வந்து விட்டார்கள். அலட்சியப் படுத்தாமல் டீ காப்பி வழங்கினார். குரூப் போட்டோ எடுத்துக்கொண்டு ஒவ்வொருவருக்கும் ஒரு பிரதி தம் செலவில் அளித்தார். ஆளுக்கு ஐந்து ரூபாய் வழிச் செலவுக்குக் கொடுத்து அனுப்பினார். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக நூல்களைத் தம் வீட்டில் வாங்கி வைத்துப் படித்துப் பார்த்த நடிகர் அவர் ஒருவரே!

○ இரணியலிங்கம், தூத்துக்குடி

? பாரதிராஜாவின் புதிய படத்துக்கு டாப்டக்கர் 'என்று பெயர் வைத்திருக்கிறாரே, டாப் டக்கர் என்றால் என்ன அர்த்தம்?

! 'ரொம்ப அழகுதான்' போங்க, இது தெரியாதா!

○ பி. ஆர். பார்த்தசாரதி, மன்னார்குடி

? ஒரு பத்திரிகையின் வளர்ச்சிக்கு வாசகர்தான் ஐயா காரணம்! வாசகர் ஆதரவு இல்லாததால் தானே கமலம், மயன், மூக்குத்தி போன்ற பத்திரிகைகள் மறைந்தன. ஞாபகம் இல்லையா?

! நான் வளர்ச்சிக்கான காரணங்களை அடுக்கினால் நீர் மறைவுக்கான காரணத்தைக் கூறிச் சாடுகிறீரே, நியாயமாயிருக்கா?

○ ச. ஜெயக்குமார், நெல்லை ★

? ருஷ்ய அதிபர் மறைந்து 26½ மணி நேரம் கழித்துத்தான் பொதுமக்களுக்கு அறிவிப்பு செய்த கம்யூனிஸ்ட் அரசு பற்றி....?

! இத்தகைய அநீதி கம்யூனிஸ ஆட்சி முறையில் மட்டுமே நடக்க முடியும். அந்த 26½ மணி நேரத்தில் பதவிப் போட்டி நடந்து ஆண்ட்ரோபோவ் வென்றிருக்கிறார். இந்த கே.ஜி.பி. (ருஷ்ய ஒற்றர் படை அமைப்பு)தலைவர், பிரஷ்னேவின் மகளும், அவள் காதலன் செய்த நகைத் திருட்டில் சம்பந்தப்பட்டிருப்பதாகச் செய்தி பரப்பியவர். பிரஷ்னேவின் செல்வாக்கைக் குறைக்கவே இப்படி உண்மைக்குப் புறம்பாக வதந்தி பரப்பினார் ஆண்ட்ரோபோவ் என்று கருதுவோர் உண்டு. பிற தலைவர்களுடைய ரகசியங்கள் இவருக்குத் தெரியுமாதலால் அஞ்சுவார்கள். இவரைப் பற்றிய ரகசியம் ஒன்று அம்பலமாகும்வரை!

○ என். கே. பரமசிவம், சென்னை-12

? சத்துணவுத் திட்டம் சரி, இலவசப் பல்பொடி அவசியம்தானா?

! பற்களைச் சரியாக விளக்காததால் பல விதமான நோய்கள் உடலில் பல்வேறு உறுப்புக்களில் உருவாகின்றன. எனவே பற்பொடி அவசியம்தான். ஆனால் எதற்கெடுத்தாலும் சர்க்காரை எதிர்பார்க்கிற மனப்பான்மையை வளர்ப்பது அவசியமில்லை. மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்தால் தங்களைத் தாங்களே கவனித்துக் கொள்வார்கள். அரசின் அடிப்படைக் கவனம் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கான வழிமுறைகளைக் காண்பதிலேயே இருக்க வேண்டும்.

○ லலிதா ஸ்ரீனிவாசன், கோவை-37

? உங்களுக்குப் பிடிக்காதது எது?

! பிடிக்காத பலவற்றுள் ஒன்றுபுகைப்பிடிப்பது. அதன் தீமையை விளக்கும் கலை நயம் மிக்க 'போஸ்டர்' ஒன்று ரொம்பப் பிடித்தது! (படம்: நன்றி — ஸ்கானா)

○ ராஜு சௌந்திரன், ஈரோடு 10

? பழைய சிகப்பும் போலீஸ் தொப்பிக்கு இருந்த மரியாதை இப்போதைய நீல போலீஸ் தொப்பிக்கு இல்லை என்பது என் கருத்து. உங்கள் எண்ணம்?

! என் எண்ணமும் அதுதான். ஆனால் மதிப்புக் குறைந்தது தொப்பி மாறியதால் மட்டும் அல்ல.

○ எஸ். லீலா இராம், தக்கலை

? தீபாவளி ரிலீஸில் ஜெயிக்கப் போவது யார்?

! கலெக்ஷனா, கலைச் சிறப்பா எதைக் கேட்கிறீர்கள்? பாக்கியராஜ், மணிவண்ணன் இருவரும் வியாபார ரீதியில் பரிமளிப்பதாகத் தெரிகிறது. பாலசந்தரின் அக்னி சாட்சி ரொம்ப ஹெவி சப்ஜெக்ட்.

என்று பேச்சு அடிபடுகிறது. ஆனால் கலைச் சிறப்பில் இதுவே டாப்.

○ கே. ஆர். ஜனார்த்தனன், தஞ்சாவூர்

? துக்ளக்கில் சோ-வீரமணி பேட்டி பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! சோ ஓட ஓட விரட்டியிருக்கிறார். வீர மணியும் சமயத்தில் நின்று திரும்பி ஒரு கராட்டே சாப் கொடுத்து விட்டு மறுபடி சமாளிக்க முடியாமல் ஓடியிருக்கிறார். வக்கீல் சோவுடைய குறுக்கு விசாரணைச் சாமர்த்தியம் வெளிப்பட்டாலும், வீர மணியின் அடிப்படைக் கேள்விக்கு இன்னும் திருப்திகரமான பதில் யாரிடமும் பிறக்கவில்லை. ''கோயிலில் பூஜை செய்கிறவர்கள் எந்த ஜாதியினர் என்பது முக்கியமில்லை; அவர்கள் ஆகம முறைகளை நன்கு அறிந்தவர்களாகவும், பக்தி உள்ளவர்களாகவும் இருக்க வேண்டும் என்பதே முக்கியம். இந்த ஒரு இடத்திலேனும் ஜாதி அடிப்படையில் ஒதுக்கீடு இன்றித் தகுதி அடிப்படையில் மட்டுமே நியமனங்கள் நிகழ்ந்தால் மகிழலாம்''— இதுதான் எனக்குத் திருப்தி அளிக்கக் கூடிய பதில்.

○ எந்தல் ஆர். இளங்கோ, திருச்சி

? அண்மையில் உங்களைக் கலக்கிய நிகழ்ச்சி எது?

! இதை நம்புவதே உங்களுக்குக் கஷ்டமாக இருக்கும். கல்கி இசை விழா சிறப்பிதழுக்கு ஒரு சிறு கதை எழுதித்தருமாறு கல்கி ஆசிரியர் எழுதிய கடிதத்தை விலாசம் எழுதித் தபாலில் சேர்க்கப் போன தருணத்தில் தி. ஜானகிராமன் காலமான செய்தி கிட்டியது. வேதனையுடன் கடிதத்தைக் கிழித்துப் போட்டேன். அவரது இலக்கியச் சிறப்பு நாடறியும். மெழுகுவர்த்தியின் இரு பக்கங்களையும் எரிய விட்டது போல் அவர் உழைத்தார் என்பதைச் சிலரே அறிவர். இரவு இரண்டு மணி வரை அ. இ. ரே. க்குநிகழ்ச்சிகள் தயாரிப்பார். 'அம்மா வந்தாள்' ஒரே இரவில் எழுதி முடித்தார். எல்லோரிடமும் சகஜமாகப் பழகுவார். யாருக்கும் தொந்தரவு தர விரும்ப மாட்டார். அவருக்கு உடம்பு நலமில்லை என்பது அவர் மகனுக்கே தெரியாது. யதேச்சையாக வந்தவர் அப்பாவை மருத்துவ மனையில் சேர்த்தார். டூ லேட்!

# நீங்கள் தராசு



✖ அசோகன்



✖ ஆண்ட்ரோபோவ் (நன்றி: நியூஸ்வீக்)

○ தி. சந்தரேசன், கோயமுத்தூர்

? ஆசிய விளையாட்டுப் போட்டி இவ்வளவு செலவு செய்து நடத்த வேண்டியது அவசியம்தானா?

! அவசியமில்லை என்று சொல்லிப் பார்த்தோம். கேட்கவில்லையே! இனிக் குமுறுவதை விட்டு குதூகலிப்பதுதான் சரி என்ற முடிவுக்கு வந்து டி. வி. பார்க்கிறேன். ரசிக்கிறேன். நேரில் போயிருந்தால் கூட ஒரு நாளைக்கு ஓரிரு ஸ்டேடியங்களுக்குத் தான் செல்லமுடியும். டி.வி.யில் எல்லா இடங்களிலும் நடப்பவற்றின் 'ஹைலைட்ஸ்' காட்டுகிறார்கள். காமிராக் கண் பல்வேறு கோணங்களில் நம்மை வெகு நெருக்கமாக அழைத்துப் போகிறது. நேரில் பார்த்தாலும் இத்தனை தெளிவாகக் காண முடியாது. ஆனால் ஒரு குறை. விளையாட்டுக்களைத்தான் பார்க்கிறோமே யொழிய, தலைநகரில் நிலவும் உற்சாகத்தை டி. வி.யில் உணரமுடியவில்லை. இது நிகழ்ச்சித் தயாரிப்பாளருக்குத் தோல்வியே!



டெட்ரேட் பிரமுகர்கள் நிலைமையை விளக்கும் போஸ்டர்

★ ரூ. 10 பரிசு பெறுபவர்

ச. ஜெயகுமார்
புன்னை சாத்தான்குறிச்சி
நெல்லை 628 151




# என் கனவுகள் என் தேவதைகள்

● ரஸிகா கோத்தாரி



'அகண்ட் ஆனந்த்' ஜனவரி 81 இதழில் வெளிவந்த குஜராத்திச் சிறுகதை நம்மை மிகவும் கவர்ந்ததாகத் தெரிவித்தார், சென்னைத் தொழிலதிபர் ஜெ. சி. கோத்தாரி அவர்களின் மனைவி ஸ்ரீமதி ரஸிகா கோத்தாரி. அவந்திகா குணவந்த் எழுதிய இக்கதையின் தமிழ் வடிவம்: சாருகேசி

பதங்காவுக்குச் சிறு வயதில் அம்மா கதைகள் சொல்லிச் சொல்லி நட்சத்திரங்களிலும், சந்திரனிலும், தாமரைத் தடாகத்திலும், வானத்திலும் வசிக்கும் தேவதைகளின் நினைவுகள்தான். அம்மா மட்டுமென்ன, பதங்காவையும் 'அழகுத்தேவதை!' என்பாள்.

பத்தொன்பது வயதில் பதங்கா ஓர் அழகுத் தேவதையாக மலர்ந்தபோதும் தேவதைகளின் ஆதிக்கத்திலிருந்து விடுபடவில்லை! அந்த மாய உலகில் அவள் தன்னை மறந்து வலைய வந்து கொண்டிருந்தாள். வெளியே நிதர்சனமான வாழ்க்கை அவளைப் பாதித்ததாகவே தெரியவில்லை.

அழுக்கும் இருளும் நிறைந்த அந்தச் சந்தில் வெளிச்சமே இல்லாத அவளுடைய ஒரே அறை அவளைப் பாதிக்கவேயில்லை. சந்தோஷத்திலேயே மிதந்த பதங்காவிடம் எல்லாரும் ஆசையுடன் பழகியதில் வியப்பு இல்லை.

''பதங்கா, உனக்கு ஒரு பணக்காரக் கணவனைப் பார்த்துக் கல்யாணம் செய்து வைக்கப் போகிறேன்!'' என்று அம்மா மாயா அவளிடம் சொன்னால், ''பணக்காரக் கணவன் வேண்டாம்மா! நல்ல பெரிய மனசுள்ள, வாழ்க்கையை ரசிக்கிற கணவனாகத் தேடிப் பிடி!'' என்பாள்.

செல்வமும் வசதிகளும் மட்டுமே சந்தோஷ வாழ்க்கையாகி விடுவதில்லை. நகை நட்டுப் போட்டுக்கொண்டு, பட்டும் ஜரிகையும் உடுத்திக் கொண்டால்தான் ஆயிற்று என்ன? என் தோழிகள் பணக்காரிகள்தான். ஆனால் அவர்கள் பெற்றோர் கொஞ்சமாவது அவர்களுடன் உட்கார்ந்து பேசவோ, அவர்கள் கவலைகளையும் குறைகளையும் தெரிந்து கொள்ளவோ செய்திருக்கிறார்களா?

அம்மா மாயா அவள் வயதில் அப்படி இருக்கவில்லை. பணக்காரனைக் கைப்பிடித்து ராஜபோகமாய் வாழ வேண்டும் என்று கோட்டை கட்டினாள். நடக்கவில்லையே! பரேஷ் என்கிற சாதாரண மனிதர்தானே அவளுக்குக் கணவனாக வாய்த்தார்! ஆனால் அம்மாவின் கனவுலக தேவதைகள் பெண்ணையும் பிடித்துக் கொண்டன போலும்!

அம்மா மாயாவின் தங்கை ஒரு வரன் கொண்டுவந்தாள். நிகில் மேத்தா என்று கெமிகல் என்ஜினியர். இரண்டாயிரம் ரூபாய் சம்பளம். பதங்காவைப் பார்த்தும்





பிடித்துப் போய்விட்டதாகக் கூடச் சொல்லி விட்டாள்.

''வெறும் பணத்தில் புரண்டு கொண்டு அந்தஸ்தையும், கௌரவத்தையும் மட்டுமே தினசரி வாழ்க்கையில் பெரிதாக நினைத்துக் கொண்டிருக்கும் இந்த மனிதருடன் என்னால் வாழ முடியாது!'' என்று தள்ளிவிட்டாள் பதங்கா.

''ஐயோ, நீ இந்த உலக வாழ்க்கையை எப்போதுதான் உணரப் போகிறாய்!'' என்று ஆத்திரத்தில் வெடித்தாள் அம்மா மாயா.

''எனக்கு இந்தப் பணக்காரத் தனமே பிடிக்கவில்லையம்மா! அப்படியே குமட்டுகிறது... மூச்சை அடைக்கிறது!''

அம்மா மாயாவுக்குப் பழைய நினைவுகள் வந்தன. திருமணம் செய்து கொண்டு கணவர் பரேஷின் இந்தச் சின்னஞ் சிறிய இருள் நிறைந்த வீட்டுக்கு வந்ததும் பரேஷ் அன்புடனும், ஆதரவுடன் அணைத்துக் கொண்டதும், அவள் அவரை ஏற்காமல் உதறியதும், அவருடன் மனம் ஒன்றிப் போகாமல் இருந்ததும்...

ஆனால் பதங்கா அப்படியில்லை.

''நான் அப்பா-பெண். அப்பாவுடன் இத்தனை வருஷங்கள் குடும்பம் நடத்தியும் வாழ்க்கை என்றால் என்ன என்றே நீ புரிந்து கொள்ளவில்லையே அம்மா! நீ கனவுகளை மருந்துகளாகச் சாப்பிட்டிருக்கிறாய்! உன் உள்ளத்துக்குள் பார்! என் போக்கும் அப்பாவின் போக்கும் உனக்குப் பிடிக்காததாலேயே நீ மகிழ்ச்சியோடு இல்லை. எங்கள் போக்கு வித்தியாசமானது. இதை ஏன் புரிந்து கொள்ள மாட்டேன் என்கிறாய்?'' என்றாள்.

பரேஷ், ''உன் பெண்ணை நீ புரிந்து கொள்'' என்று மாயாவை அணைத்துக் கொண்டபோது, மாயாவுக்கு இருபது வருஷங்களுக்கு முன் கணவரின் அன்பான அணைப்பும் ஆதரவும் நினைவுக்கு வந்தன.

''உங்களைப் புரிந்து கொள்ளாமல், உங்கள் போக்கைத் தெரிந்து கொள்ளாமல் என்னுடைய அன்பையும் பாசத்தையும் இத்தனை காலம் உங்கள்பால் காட்டாமல் வீணாக்கினேன்!'' என்றாள் மாயா.

பதங்காவுக்கு அம்மாவின் இந்த மாற்றம் சந்தோஷமாயிருந்தது.

ஸெவன்ஸீஸ் கார்லிக் காப்ஸ்யூல்கள் உடனடி நிவாரணத்திற்கு உறுதி தரவில்லை. அதற்கு மாறாக, அவை ஆரோக்கியப் பிரச்சினைகளின் ஆணி வேரையே தாக்கி, படிப்படியாக அவற்றின் அடிப் படைக் காரணத்தை வேரோடு களைகிறது.

### சீரான ஜீரணம்

பூண்டு சீரான சிறந்த செரிமானத்துக்கு உதவுகிறது. அத்துடன் குடலில் தீமை விளைவிக்கும் கிருமிகளை வளர விடாமல் தடுக்கும் சக்தி வாய்ந்த கிருமி நாசினியும் கூட.

### ஆரோக்கிய மிக்க ரத்தம்

பூண்டு ஜீரண சக்தியை அதிகமாக்கு வதன் மூலம், நமது உணவில் உள்ள புரதம், வைட்டமின்கள் மற்றும் இதர இன்றியமையாத பொருட்கள் யாவும் ரத்தத்துடன் சரிவரக் கலக்கச் செய்கிறது. எனவே உங்கள் உடலைக் கட்டுமானத்துடன் வைத்திருக்கத் தேவையான சக்தியைப் பெறுகிறது உங்கள் ரத்தம்.

### தொல்லையற்ற சுவாசம்

பூண்டு நுரையீரலிலுள்ள தொல்லை தரும் கபத்தை நீக்கும் எக்ஸ் பெக்ட்ரண்ட் செயலாற்றல் உடையது. ஆகவே, நீங்கள் மேலும் ஆழமாக தாராளமாக சுவாசிக்கிறீர்கள்.

- பூண்டின் கிருமிநாசினி குணத்தின் காரணமாக நுரையீரல், இருமல் மற்றும் தொற்று நோயிலிருந்து விடுதலை பெறுகிறது.

### 30 நாட்களும் மேலான ஆரோக்கியம்

இதைச் செய்து பாருங்கள். ஒரு மாதம் நாள்தோறும் ஒரு ஸெவன் ஸீஸ் கார்லிக் காப்ஸ்யூல் சாப்பிட்டு வாருங்கள், அதன் நன்மையை உணருங்கள். உங்கள் ஆரோக்கியத்தில் குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தை உணர்வீர்கள். அந்த மாற்றமே உங்களுக்கு உற்சாகத்தைத் தரும். உங்கள் வாழ்க்கை வளமாகப் பிரகாசிக்கிறது, காரணம் உங்கள் உடல் துள்ளும் துடிப்புடன் ஆரோக்கியமுடன் விளங்குகிறது.

''நல்ல ஆரோக்கியத்துடன் விளங்க நான் நாள்தோறும் ஒரு ஸெவன்ஸீஸ் கார்லிக் காப்ஸ்யூல் சாப்பிடுகின்றேன். இப்போது அவை இந்தியாவில் கிடைப்பது பற்றி நான் மகிழ்ச்சி அடைகிறேன்''

—சுனில் கவாஸ்கர்

## நாளொன்றுக்கு ஒரு ஸெவன்ஸீஸ் காப்ஸ்யூல் சாப்பிடுங்கள். ஒன்றே ஒன்று.

# ஸெவன் ஸீஸ் கார்லிக் காப்ஸ்யூல்

98 நாடுகளில் கிடைக்கிறது. இப்போது இந்தியாவிலும்

TRIKAYA-UG-4-82-TAM



30 மற்றும் 100 கொண்ட பேக்குகளில் கிடைக்கின்றன.

அவள் பெயர் வாக்தேவி. ஹைதராபாதில் வசித்து வருகிறாள். ஒரு கல்யாணத்தை முன்னிட்டு விஜயவாடாவுக்கு வந்தாள். அப்படியே கல்யாணமாவதற்கு முன், பதினைந்து ஆண்டுகளுக்குமுன் தான் வாழ்ந்த மசூலிப்பட்டணத்தைப் பார்க்க விழைந்தாள். அங்கு வசிக்கும் தன் இளமைப் பருவத் தோழி ஸ்வராஜ்யம் வீட்டுக்குச் சென்றாள்.

வாக்தேவி தன் தோழியுடன் ஊர் சுற்றிப் பார்க்கக் கிளம்பினாள். தோழியர் இருவரும் முதலில் வாக்தேவி இளமைப் பருவத்தில் வசித்த வீட்டுக்கு வந்தார்கள். அங்கு அந்த வீட்டு மாடியில் ஒரு எழுத்தாளர் குடியிருந்தது வாக் தேவிக்கு நினைவுக்கு வந்தது. அவர் இப்போது எங்கே இருக்கிறார் என்று விசாரித்தாள். பக்கத்தில்தான் கல்யாணமாகிக் குடும்பத்தோடு வசிக்கிறார் என்று தெரிந்து கொண்டாள். அவரை இப்போது நேரில் பார்க்க பேர் ஆர்வத்துடன் இருவரும் சென்றனர்.

வாக்தேவியின் ஆர்வத்துக்குக் காரணம் உண்டு. அந்த எழுத்தாளரின் பெயர் மூர்த்தி. அவர் எழுத்தில் மிகுந்த முற்போக்குக் கருத்துக்கள் காணப்படும். அவர் எழுத்தில் பெண் விடுதலை கொப்பளிக்கும். வரதட்சிணைக் கொடுமை கடுமையாகச் சாடப்பட்டிருக்கும். ஆண்களோடு சரிசமமாகப் பெண்களை நடத்தாமல், விலங்குகளைப் போல் அடிமைப்படுத்தி நடத்தும் ஆண் சாமராஜ்யத்தைத் தம் எழுத்தினால் எரித்துச் சாம்பலாக்கி வந்தார். இந்தத் தீவிர இளம் எழுத்தாளரின் லட்சிய வேகங்களைப் படித்து, இளம் பெண்ணாக இருந்த வாக்தேவி பெரிதும் பாதிக்கப் பட்டிருந்தாள். அவரை லட்சிய புருஷராக மதித்துப் போற்றி வந்தாள். இப்போது அந்த லட்சிய புருஷரைக் காணப்போகிறோம் என்பதில் ஆர்வம் இருப்பது இயல்புதானே.

எழுத்தாளர் மூர்த்தி வீட்டுக்குச் சென்று பரிச்சயமானதும், வாக்தேவி, "உங்கள் மனைவி எங்கே காணோம்?" என்று கேட்டாள்.

"அவள் காஷாவல் லீவில் இருக்கிறாள்!"

"அவருக்கு உடம்பு சரியில்லையா? எங்கேயாகிலும் வேலை செய்கிறாரா?" என்று கேட்டாள்.

"சே! சே! அதெல்லாம் இல்லை. பெண்களுக்கு மாதந்தோறும் இயல்பாக ஏற்படும் உடற் கோளாறு காரணமாக மூன்று நாள் வீட்டுக்கு விலக்காகி ஒதுக்குப்புறமாக ஓர் அறையில் இருக்கிறாள்!"

வாக்தேவிக்குப் பேரதிர்ச்சியாக இருந்தது. "நீங்கள்கூடவா இந்தப் பத்தாம் பசலி வழக்கத்தைக் கடைப்பிடிக்கிறீர்கள்? எவ்வளவோ முற்போக்கான சீர்திருத்தக் கருத்துக்களை எழுதினீர்கள்!" என்றாள்.



அவர் மனைவி வரவழைக்கப்பட்டு வாக்தேவிக்கும், அவள் தோழிக்கும் அறிமுகப் படுத்தப்பட்டாள்.

''இவரை வரதட்சிணை வாங்காமல்தானே திருமணம் செய்து கொண்டீர்கள்?'' என்று மூர்த்தியைப் பார்த்துக் கேட்டாள்.

''என் தகப்பனாரிடம் நன்றாகப் பணம் கறந்த பிறகுதான் என் கழுத்தில் தாலி கட்டினார்!'' என்றாள் மூர்த்தியின் மனைவி.

வாக்தேவிக்கு மீண்டும் ஓர் அதிர்ச்சி. இப்படிப் பல அதிர்ச்சிகளுக்குப் பின் வாக்தேவி கேட்டாள்: ''உங்கள் கதைகளில் எவையெல்லாம் பொல்லாதவை, பிற்போக்கானவை என்று காட்டினீர்களோ அவற்றையெல்லாம் நீங்கள் உங்கள் வாழ்க்கையில் கடைப்பிடிக்கிறீர்கள். உங்கள் எழுத்துக்கும் உங்கள் நடைமுறைக்கும் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் முரண்பட்டதாக இருக்கிறதே! இது முறையா?''

''நான் என்ன செய்வது? நான் இந்தச் சமுதாயத்தில் வாழ்ந்தாக வேண்டுமல்லவா? என்று பதில் சொன்னார். அதனைத் தொடர்ந்து. ''அது சரி, உங்களுக்குக் கல்யாணமாகி விட்டதா?'' என்று கேட்டார்.

''ஓ! கல்யாணமாகி விட்டது. என் கணவர் ஹைதராபாத்தில் பாங்கியில் வேலையில் இருக்கிறார். ஒரு கல்யாணத்தைக் கருதி விஜயவாடா வரை வந்தவள் அப்படியே இங்கே வந்தேன்'' என்றாள் வாக்தேவி.

''உங்கள் கழுத்தில் தாலிக் கயிற்றைக் காணவில்லை. அதனால்தான் கல்யாணமாகி விட்டதா என்று கேட்டேன்'' என்றார் மூர்த்தி.

''தாலி – அடிமைத்தனத்தின் சின்னம் என்று அந்த நாட்களில் நீங்கள்தானே எழுதினீர்கள்? அதனால் கழற்றி விட்டேன்!'' என்றாள் வாக்தேவி.

பிரிந்தனர்.

சில நாட்கள் கழித்து ''சூலிப்பட்டணத்திலிருக்கும் தோழி, ஹைதராபாத்தில் உள்ள வாக்தேவிக்குக் கடிதம் எழுதினாள்:

''உன்னையே கதாநாயகியாக வைத்து ''பத்ரகாளி'' என்ற தலைப்பில் நம் மூர்த்தி ஒரு கதை சமீபத்தில் எழுதியிருக்கிறாரே பார்த்தாயா?''



● ஐ. ஜே. ராவ்

திரு ஐ. ஜே. ராவ், சென்னை சுங்க இலாகாவில் உயர் பதவி வகிக்கிறார். தெலுங்கு இலக்கிய உலகில் 'இச்சாபுரபு ஜகந்நாத ராவ்' என்னும் பெயரில் சிறந்த நாவல், சிறுகதை, நாடக ஆசிரியராகப் புகழ் பூத்துள்ளவர்.

அண்மையில், 'ஆந்திர ஜோதி' இதழில் கொல்லூரி ராஜ்யலக்ஷ்மி எழுதியுள்ள இந்தத் தெலுங்குச் சிறுகதையைத் தனக்குப் பிடித்த சிறந்த சிறுகதை என்று எடுத்துக் கொடுத்துள்ளார்.

தமிழ் வடிவம்: எஸ். வி. என்.

## மணக்கோலம்

அப்பா: ''பெண் பார்க்கப் போறதுக்கு முன் இது என்னடா கோலம்! எதுக்குத் திடீர்னு மொட்டையடிச்சுக்கிட்டு வந்து நிக்கறே?''

மகன்: ''பெண் 'சோ'வின் விசிறியாம்ப்பா... தரகர் சொன்னார்!''

—உ. ராஜாஜி

## விபரீதப்பெயர்

வட ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள எங்கள் கிராமத்தின் பக்கத்தில் நாய வாடி, தாக்குவாடி, அருகில் வாடி, கிட்டவாடி இப்பெயர்கள் கொண்ட கிராமங்கள் உள்ளன. கிராமத்தின் பெயர்களை மாற்ற முயன்றும் தோல்வி தான்.

—தென் எலப்பாக்கம் என்.எஸ். வாசன்

# முத்தாளனும் ஒரு மனிதனே!

# நோயுற்றிருக்கும் மருத்துவமனை



அமைச்சர் திரு ஹண்டே, தஞ்சையில், ராஜா மிராசுதார் ஆஸ்பத்திரி சகிக்க முடியாமல் இருப்பது பற்றியும், தஞ்சை ஆஸ்பத்திரிதான் மிக மோசமான ஆஸ்பத்திரி என்றும் பேசியிருப்பதைப் படித்தவுடன் தஞ்சைக்கு விமோசனம் வரும் என்று சிறிது நம்பிக்கை ஏற்பட்டுள்ளது. அவரை தயவு செய்து திருச்சி பெரிய ஆஸ்பத்திரிக்கு விஜயம் செய்யுமாறு அழைக்கிறோம்.

திருச்சி நகரில் புத்தூர் ஈ. வே. ரா. சாலையில் இருக்கும் இந்த காந்தி நினைவு ஆஸ்பத்திரியின் மோசமான நிர்வாகத்துக்கும், குழப்ப நிலைக்கும் முதல் காரணம் இந்த ஆஸ்பத்திரிக்குக் கடந்த ஐந்து மாதங்களாக டி.எம்.ஓ. (மாவட்ட மருத்துவ அதிகாரி) இல்லாமல் இருப்பதுதான். கேட்பாரற்று இருப்பதால் சில டாக்டர்களும் நர்ஸ்களும், ஆம்புலன்ஸ் டிரைவர்களும், சுகாதார ஊழியர்களும் மற்றும் சில இதர ஊழியர்களும் கட்டுப்பாடற்ற சுயாட்சியுடன் செயல்படுகின்றனர்.

தலையாய வேடிக்கை என்னவென்றால், இந்த ஆஸ்பத்திரியின் உள் தங்கியிருக்கும் மருத்துவ அதிகாரி (ரெஸிடெண்ட் மெடிகல் ஆபீசர்) காம்பவுண்டுக்குள் தங்குவதில்லை. அவருடைய குவார்ட்டர்ஸில் அவருக்குப் பதிலாகத் தங்கியிருக்கும் ஏ.டி.எம்.ஓ. இரவு நேரத் தேவைகளுக்குக் கூப்பிட்டால், ''நான் ஆர். எம். ஓ. இல்லை, ஆகையால் வர இயலாது'' எனக் கூறிவிடுகிறார்.

ஆஸ்பத்திரியில் நிலைகொள்ளா அளவுக்கு வெடித்து விடும் அளவுக்கு நோயாளிகள் அனுமதிக்கப் பட்டிருக்கின்றனர். படுக்கை எண்ணிக்கையை விட மூன்றரை மடங்கு அதிகமாக நோயாளிகள் அனுமதிக்கப் படுகின்றனர். அதனால் கொடுக்கப்படும் உணவுத் தரமும் பாதிக்கப்படுகிறது. மருத்துவக் கவனிப்பு சீர்குலைகிறது.

மருந்துகள் வாங்கும் முறை, ஸ்டோரேஜ், விநியோகம் ஆகியவற்றைப் பற்றிப் புகார்கள் கொஞ்ச நஞ்சமல்ல. லஞ்சப் பேய் தலைவிரித்தாடும் இடம் இது. 'டிஜோக்ஸின்' என்ற எமர்ஜன்ஸி மருந்து வெளியில் கிடைத்தாலும் கூட ஆஸ்பத்திரியில் கிடைப்பதில்லை. ஏனெனில் ஆஸ்பத்திரியில் சொல்லப்படும் 'பேரத்திற்கு' அந்தக் கம்பெனிக்காரர்கள் இசையவில்லை.

சில குறிப்பிட்ட மருந்துகள் மட்டுமே மத்திய அரசுக் கம்பெனி ஐ.டி.பி.எல்.லிலிருந்து வாங்க வேண்டும். மற்றபடி மருந்துகள் உள்ளூர் மருந்துத் தயாரிப்பாளர்களிடமிருந்துதான் வாங்கப் படுகிறது. இப்படித்தான் தரக் குறைவான மருந்துகளும், ஆபத்தை விளைவிக்கும் மருந்துகளும் ஆஸ்பத்திரிக்குள் வருகின்றன. சென்ற வாரம் வயிற்று வலிக்காக 'லிவரைட்' என்ற ஒரு காப்ஸ்யூலைச் சாப்பிட்ட ஒரு டாக்டரே வாந்தி எடுத்ததாகச் சொல்லப் படுகிறது. அந்த காப்ஸ்யூலை உடைத்துப் பார்த்த போது மண் கலரில் ஏலக்காய்ப் பொடி வாசனையுடன் பொடி உதிர்ந்தது. இந்த மாதிரி குடிசை மருந்துத் தொழிற்சாலைகளை தைரியமாக சோதனை செய்யப் போதுமான மருந்து இன்ஸ்பெக்டர்கள் இல்லை. இதற்கு ஒரே வழி, மத்திய மருந்து வாங்கும் திட்ட (Central Purchase scheme)த்தை சீக்கிரம் அமல்படுத்தி எல்லா மருந்துகளையும் எல்லா ஆஸ்பத்திரிகளுக்கும் ஒரே இடத்திலிருந்து சப்ளை செய்ய வேண்டும்.

காலை 7.30க்கு ஆரம்பிக்க வேண்டிய அவுட் பேஷண்ட் பகுதி 8.30 மணிக்குத்தான் திறக்கப்படுகிறது. அதனால் பெரிய கூட்டம் சேர்ந்து நோயாளிகளின் வேதனையும் அதிகரிக்கிறது.

சுகாதார நிலைமைகளும் நிரம்ப சீர்திருத்தப்பட வேண்டும். காலை 11 மணிக்குக் கூட கழுவப்படாத கக்கூஸ்களையும், பாத்ரூம்களையும் காணலாம். பொதுப் பணித் துறை அதிகாரிகள், ப்ளம்பர்கள் ஆகியோருடன் டி.எம்.ஓ. வழக்கமாகச் செல்லும் சுகாதார ரவுண்டை நிறுத்தி விட்டார்கள்.

ஐ. ஸி. ஸி. யூனிட்டில் மானிட்டர்கள் உள்ளன. ஆனால் இயங்குவதில்லை. ஏர் கண்டிஷனர் உள்ளது. ஆனால் எப்பொழுதும் ரிப்பேர். மார்ச்சுவரி வண்டி ஓடுவதே அரிது.

எனவே மாண்பு மிகு சுகாதார அமைச்சர் திருச்சிக்கு விஜயம் செய்து ஆஸ்பத்திரியை சாதாரண மனிதர்களுக்குப் பயன்படும்படி திருத்தி அமைத்துத் திருச்சி மக்களின் நன்றிக்குப் பாத்திரராகட்டும்.

**எஸ். புஷ்பவனம்**

---

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy. Madras-600 032. (Phone: 431543)

**Assistant Editor: P.S. Mani** **Layout Artist: Nambi** **Editor: K. Rajendran**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# கிளியர்-டோன்

## உபயோகிப்பவர்கள் முகமலரக் கூறுவதைக் கேளுங்கள்:



"முன்னைவிட சிகப்பாகி விட்டேன் என்கிறாள் என் மாமன்மகள்... அவளே பாராட்டுவதென்றால் அது பெரிசுதான்."
—டெப்பி நாம்தார்



"கடந்த 4 வாரமாக கிளியர்-டோன் உபயோகித்து வருகிறேன். மாசு மரு எல்லாம் கிட்டத்தட்ட மறைந்தே போச்சு"
—ஷெர்லி படேல்
மாணவி



"வெய்யிலில் அலையும்படியான வேலை எனது. கிளியர்-டோன் தொடங்கினது முதலோ உடம்பு கறுக்கலே காணும்"
—பாலெட் சல்தானா



"கிளியர்-டோன் என் சருமத்தை மழமழப்பாக ஆக்கியிருக்கிறது— பாருங்க, முழங்கைப் பகுதிகளைக் கூட"
—ராஜம் ராஜாமணி
இல்லத் தலைவி

## பரிபூரண சிகப்பழகு சாதன க்ரீம்

இதுபோல் ஆயிரமாயிரம் பேர் மேனியில் பேசுது கிளியர்-டோன். அவர்கள் பார்க்காத க்ரீமா, லோஷனு, மூலிகை மருந்தா... இல்லே, எதுவுமே பலிக்கவில்லே. பிறகுதான் கண்டுகொண்டனர் ஒரு சம்பூரண சிகப்பழகு சாதன க்ரீம்: **கிளியர்-டோன்.**

பன்னாட்டுலக மருந்தாராய்ச்சிப் பயனும்—விஞ்ஞான ஆக்கமுறை சிகப்பழகு க்ரீம்—இதனை உங்களிடம் கொணருவோர் கிளோலஸ் லெபாரடரீஸ் இந்தியா லிமிடெட். இந்தியாவில் கிடைக்கின்ற வேறெந்த க்ரீமிலும் இல்லாத தனிச் சிறப்புப்பொருள் அடங்கியது **கிளியர்டோன்** இயற்கை வழியில் இயங்கி, மேனிமீது மலரவைக்குது நிறுகிறு சிகப்பழகை, மாசு மறு நீக்குது. கோடையிலும் குளிரிலும், ராத்திரியும் வரட்சியிலும் வாடாத வாழைத்தண்டு மென்மையினை வழங்குகிறது கிளியர்டோனில் உள்ள விசேஷ சாரசத்து.

மாறுவீர் இன்றே—மாசில்லாது மிளிரும் சிகப்பழகுக்கு—**இனி என்றும் கிளியர்-டோன். காரணம்,** வெயிலில் பட்டு உடம்பு **கறுக்கா** வண்ணம் சூரிய அல்ட்ரா-வயலெட் கதிர்களைத் தடுக்கவும் செய்கிறது **கிளியர்-டோன்.**

பாரெங்கும் பலகோடி அழகுமாந்தர் பயன்கண்ட வழி உமக்கே-உபயோகிப்பீர் வேளாவேளை **கிளியர்-டோன்**

பலநாட்டுலகிலும் புகழ்பெற்றது.

Clear-tone
the perfect fairness cream
Makes you fairer, keeps you fairer, naturally

உயரிய ஃபார்முலா
ஓங்கிய சக்தி

**சிகப்பழகு ரகசியம்— இயற்கையாய் உமக்கே**

**கிளியர்-டோன்**
பாரிஸ் . லண்டன் . நியூயார்க்

deCunha NICL/26/82-TM